௮ — வன்சரண்சுரர்க்காயசுரர்க்குவெங்கூற்றமுமாய்* தன்சரணிழற்கீழுலகம்வைத்தும்வையாதும்*தென்சர ண்டிசைக்குத்திருவிண்ணகர்சேர்ந்தபிரா* னென்சரணென்கண்ணனென்னையாளுடையென்னப்பனே*௮॥
என்னப்பனெனக்காயிகுளாயென்னைப்பெற்றவளாய்* பொன்னப்பனமணியப்பன்முத்தப்பனென்னப்ப

---

ஆ — தன் திருவடிகளின்கீழிலே வைத்தருளுமவஸரத்தைப் ஸ்ரீகவிமாமாயிசளைதன் திருவடிகளிலேசேராதே அவர்களுக்கநியாமகராய் ப்ரதிகூலனாயிருந்த வெம்பெருமான் தென்திசைக்குப்புகலிடமான திருவிண்ணகரிலேபுகுந்தருளியிருந்தெனக்கு ப்ராப்யமாய் எனக்குப்ராப்யமாய் என்னைக்கொண்டு ஸர்வசேஷவ்ருத்தியுங்கொண்டருளி எனக்குஸ்வாமியானுனென்கிறார். ॥௮॥

(என்னப்பன்) சுட்டுரைத்தநன்பொனொளியையும் ஸத்ருஜமான ரத்நத்தினொளியையுமுடைத்தான திருவுடம்பையுடையனுமாய் அழகியனாய்த்தன்னொப்பாரின்றியேயிருந்த திருவிண்ணகர்சேர்ந்த வப்பன்தன் னழகாலே எனக்குஸ்வாமியாய் தன்னுடைய ஸௌஶீல்யத்தாலே பெற்றதாயும் வளர்த்ததாயும் பண்ணக்கடவஸ ஹத்தையென்பக்கலிலேபண்ணி ஸ்வவிஶேஷஜநிதமான என்னுடைய நிரவயிகவைலக்ஷண்யமெல்லாம்போப்படி

---

இ — கீழுலகம்வைத்துமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீசரையிகர்த்ருகியால்) வையாதுமிதற்கிக் குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீகவிமராயிசளையிகர்த்ருகியால்) அசுரர்க்குவெங்கூற்றமுமாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிசசெய்கிறார் (அவர்களுக்கிகர்த்ருகியால்) தாஸீபவாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எனக்கிகர்த்ருகியால்) ॥௮॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

பொன்னப்பனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சுட்டுரைத்தநவிகர்த்ருகியால்) மணியப்பனெ ன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸத்ருஜஜ்விகர்த்ருகியால்) முத்தப்பனென்கிறதற்குத் தாத்பர்யமரு ளிச்செய்கிறார் (அழகியனாயென்று) தன்னொப்பாரின்றியே யிருந்தவென்றது அப்பனுக்குவிஶேஷணம். என் னப்பனெனக்காயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னழகாலேயிகர்த்ருகியால்) இகுளாயென்னை ப்பெற்றவளாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னுடையஸௌஶீல்யத்தாலே யிகர்த்ருகியால்) தந்தனன்தனதாளை யென்னமைந்திருக்க தனதாள்நிழலேயென்று நிழல்வயஜ்ஞமாகச்சொன்னத்தால்

---

ப — சுரர்க்கு - தேவவ்ருக்திகளுக்கு, வன்சரணாய் - த்ருடமானஉபாயமாய், ஸ்வஸம்ஶ்லேஷவிமராயிலைவலவாவ நியதர்களுக்கென்றபடி. தன்சரண் - தன்னுடைய திருவடிகளுடைய, நிழற்கீழ் - ஸாயையின்கீழே, உலகம் - லோகத்தை, லோகஸ்ஸாஹாவமெநஜமெந. அந்தஸ்ரீஜநங்களையென்றபடி. வைத்தும் - வைத்துக்கொண்டும், வையாதும் - ப்ரதிகூலரைஅப்படிவைத்துக்கொள்ளாதேயும், அசுரர்க்கு-அஸுரவ்ருக்திகளுக்கு, வெங்கூற் றமுமாய் - அதிக்ரூரமான ம்ருத்யுவுமாய், கூற்றம் - ம்ருத்யு. கூற்றமுமாய் என்கிறதற்குச் சேர்ந்த என்கிற தந்தோபக்ஷேபம். தென் - தக்ஷிணமான, திசைக்கு - திக்குக்கு, சரண் - ஶரணமான, ஸம்ஸாரமைய நிவ்ருத்திஹே துமான வென்றபடி. திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே. சேர்ந்த - ரக்ஷித்து வஸிக்கிறவனான, பிரான் - உப காரகன். என்சரண் - எனக்கு சரணம், ரக்ஷணயா ப்ராப்யமென்றபடி. என்கண்ணன் - எனக்கு த்ருஷ்டிஹேதுவான வன், த்ருஷ்டிவிஷயஸர்வகாரியஸாதநஹேதுவனென்றபடி. கண்ணாயிருக்குமவன் கண்ணன். யதா - இருடீகேசன் என்கிறவிடத்திறபோலே கண் ஶப்தத்தின் மேலே ஸ்வாமித்வார்த்தமான் ஶப்தம் என்னை ஆளுடை - என்னை தாஸ னாகவுடையவன், என்னைக்கொண்டுசேஷவ்ருத்திகளெல்லாம் பண்ணிக்கொள்ளுமவ னென்றபடி. என்னப்பன் — எனக்கு ஸ்வாமீ. * * * * ॥௮॥

பொன்னப்பன் - கநகம்போலே உஜ்ஜ்வலவிக்ரஹனான ஸ்வாமியான, மணியப்பன் - ரத்நம்போலே கநகத் தில் காட்டிலும் - ஸத்ருஜமான திருமேனியையுடைய ஸ்வாமியான, முத்தப்பன் - ஶ்லாக்யஹம்ஸஶிதிலஸ்வாருப விக்ரஹனான ஸ்வாமியான. அப்பன் அப்பனென்று பஹுவாரம்சொல்லுகிறது ப்ரேமாதிஶயத்தாலே. என்னப் பனுமாய் - எனக்குவுபகாரகனுமாய், இவ்வழகையெல்லா மெனக்குக் காட்டின மஹோபகாரகனென்றபடி. தன்னொப்பார் - உபகாரகத்வத்திலே தனக்கு ஸத்ருஶர், ஒப்பார் - ஸத்ருஶர், இல்லப்பன் - இல்லாத ஸ்வாமியா ன, அதாவது. மின்னிடை மடவாரிலே அவன் வந்து மேல்விழ நீயெனக்குவேண்டா, வென்று நான் தள்ளத்தள் ள, நீ, உனக்குஹிதமறிந்தாயோ?' நானுனக்குவேணுங்காணென்று தன்னையெனக்குத் தந்தவனுகையாலே

…னுமாய்* மின்னப்பொன்மதிள்சூழ்திருவிண்ணகர்சேர்ந்தவப்பன்* தன்னொப்பாரில்லப்பன்றந்தனன்றன தாணிழலே ॥௯॥

நிழல்வெய்யிற்சிறுமைபெருமைநெடுமையுமாய்ச்* சுழல்வனநிற்பனமற்றுமாயவையல்லனுமாய்* மழலை வாய்வண்டுவாழ்திருவிண்ணகர்மன்னுபிரான்* கழல்களன்றிமற்றோர்களைகணிலங்காண்மின்களே* ॥௰॥

ஆ— அதிஶீதளமாய் ஸுகஸஞ்ஜீவநமான தன்திருவடிகளின்நிழலைஎனக்குத்தந்தருளினாரென்கிறார். ॥௯॥

(நிழல்) சாயாதபாதி ஸர்வபதார்த்தங்களை ப்ரகாரமாகவுடையவனாய், மதுரமாகப்பாடுகிற வண்டுகள்வாழுகிற திருவிண்ணகரென்னோடு ஸம்ஶ்லேஷிக்கப்பெற்ற ஹர்ஷத்தாலேயாகையால் இனிசூத்ரமாக இவ்விடத்தைவிடேன் என்றெழுந்தருளியிருந்த வெம்பெருமானுடைய திருவடிகளல்லது நமக்குமற்றொருகதியில்லை. அவனுடைய கடாக்ஷம்பெறுவதற்குமுன்பு என்னுடைய ஸம்ருத்தியில்லாமையாலும் அவன் கடாக்ஷித்தருளினவாறே நானுள்ளனாகையாலும் நமக்கவனல்லது கதியில்லையென்னுமிடம் எல்லாருக்கும் ப்ரத்யக்ஷிக்கலாமென்கிறார். ॥௰॥

(காண்மின்கள்) ஸூரிகளாஶ்ரிதவிஷயமின்றியே ஸம்ஸாரிகளுங் கண்டுவாழுங்கோளென்று அவ

இ— ஸர்வவிதமான அர்த்தத்தை அருளிச்செய்கிறார் (ஸ்வவிஶ்லேஷதஶாதியால்) போம்படியென்கிறதற்குத் தந்தருளினானென்கிறதோடே அந்வயம். ॥௯॥

✳ பத்தாம்பாட்டு. ✳

ஸுகஜீவநஹேதுவென்றது - சாயாப்ரதிஷேதம். ஸுகஜீவநஹேதுவென்றபடி. உடையவனாயென்கிறதற்கு எழுந்தருளியிருந்தவென்கிறதோடே அந்வயம். திருவிண்ணகர்மன்னுஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னோடுஸம்ஶ்லேஷிக்கவிருத்தியால்) காண்மின்களேஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுடையகடாக்ஷித்ருத்தியால்) ॥௰॥

✳ நிகமனம். ✳

காண்மின்களுலகீரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸூரிகளதிருத்தியால்) ஆணையென்கிற

ப— உபகாரகத்திலே தனக்கொப்பில்லாதவனான என்றபடி. மின்ன - மின்னும்படி, காந்திகள் ப்ரகாசிக்கும்படியென்றபடி. பொன்மதிள் - ஸ்வர்ணப்ராகாரத்தாலே, சூழ் - பரிவ்ருதமான, திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே. சேர்ந்த அப்பன் - சேர்ந்துவஸிக்கிற ஸ்வாமியானவன், என்னப்பனெனக்காய் - எனக்கென்னப்பனாய் என்றந்வயம். எனக்கானஎன்னுடையஸ்வாமியா யென்றபடி. அதாவது. எனக்கே அஸாதாரணனான என்னுடைய ஸ்வாமியா யென்கை. இகுளாய்-வளர்த்ததாயாய், இகுளென்றுவளர்த்ததாயாருக்குப்பேர். என்னைப்பெற்றவளாய்- வளர்த்துக்கொண்டதாய் போலன்றியேபத்துமாஸம்வயிற்றிலே சுமந்துபெற்றவளானஜநநியுமாய், இவர்களைப்போலே என்பக்கல் அதிவத்ஸலனாயென்றபடி. தனதாள் - தன்திருவடிகளினுடைய, நிழல்-சாயையை, தந்தனன் - எனக்குத்தந்தருளினான், விரஹாவஸ்தையாயிருந்தவென்னைத்தன்னோடுஸம்ஶ்லேஷிப்பித்தானென்று தாத்பர்யம்.॥

நிழல் - தாபஶமநியானசாயை, வெய்யில் - தாபஜநகமான ஆதபம், சிறுமை - அணுத்வம், பெருமை - மஹத்த்வம், குறுமை - ஹ்ரஸ்வத்வம், நெடுமையுமாய், தீர்க்கத்வமுமாய். ஸஶரீரமான தத்தத்த்ரவ்யாஶ்ரயகுணாதி ஸகலப்ரகாரகனா யென்றபடி. சுழல்வன - உத்பதிஷ்ணுக்களான, ஜங்கமங்களானவென்றபடி. நிற்பன - ஸ்தாவரங்களான, மற்றுமாய் - கீழ்ச்சொன்ன சாயாதபாதிகளன்றிக்கே ஜங்கமஸ்தாவராத்மகமான மற்றுமுள்ள பதார்த்தங்களையும் ப்ரகாரமாக உடையவனா யென்றபடி. அவையல்லனுமாய் - அந்தபதார்த்தங்களாகாதவனுமாய், தத்கதஸகலதோஷ அஸம்ஸ்ப்ருஷ்டனுமா யென்றபடி. இதுக்கு - மன்னு என்கிறத்தோடே அந்வயம். மழலை - மதுரமான, வாய் - வாக்வ்யாபாரத்தையுடையவையான, வண்டு - ப்ரமரங்கள், வாழ் - ஸமோஹஸம்ருத்தியாலே வாழாநிற்கிற, திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே. மன்னு - ஸ்திரமாக வஸியாநிற்கிற, பிரான் - உபகாரகனுடைய, கழல்களன்றி - திருவடிகளொழிய, மற்றோர் - வேறேயொரு களைகண் - ரக்ஷகவஸ்து, இலம் - இல்லாதவர்கள். நாம்அவன் திருவடிகளையொழிய வேறொரு ரக்ஷகவஸ்துவை யுடையோமல்லோ மென்றபடி. காண்மின்கள் - கண்டுகொள்ளுங்கோள். இவ்வர்த்தம் என்னிடத்தில் காணலா மென்றுகருத்து. * * * * * ॥௰॥

மூ:— காண்மின்களுலகீரென்றுகண்முகப்பேநிமிர்ந்த* தாளிணையன்றன்னைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன*
ஆணையாயிரத்துத்திருவிண்ணகர்ப்பத்தும்வல்லார்* கோணையின்றிவிண்ணோர்க்கென்றுமாவர்குரவர்களே ॥

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

---

ஆ:—ர்கள்கண்முகப்பேநிமிர்ந்த தாளிணையன்தன்னைக்குருகூர்ச்சடகோபன்சொன்ன ஆயிரத்துளெம்பெருமானுடைய ஸர்வநியந்த்ருத்வத்தைச்சொன்ன இத்திருவாய்மொழியை வல்லார் அயர்வறுமமரர்களுக்கு நிஸ்ஸம்சயமாக ப்ரயதபூஜ்யராவரென்கிறார். ॥௧௧॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளேசரணம்.

---

இ:— தற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானுடையவித்யாதியால்) கோணையின்றியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிஸ்ஸம்சயமாகவென்று)குரவர்களென்கிறதையுரைக்கிறார் (பூஜ்யதேத்யாதியால்) ॥௧௧॥

---

ஈ:— உலகீர் - லோகத்திலிருக்கிறஜநங்காள்? காண்மின்களென்று - இந்த ஸ்ரீபாதத்தைக்கண்டு க்ருதார்த்தராகுங்கோளென்று, கண்முகப்பே - அவர்கள்கண்ணெதிரே, நிமிர்ந்த - த்ரிவிக்ரமதேஹத்திலே வளர்ந்த, தாளிணையன்தன்னை - பாதயுக்மமுடையவனை, தன்னையென்று ஸ்வாதந்த்ர்யவைபவம், குருகூர்ச்சடகோபன்சொன்ன - ஸ்பஷ்டம், ஆயிரத்து - ஸஹஸ்ரத்தில், ஆணை - ஆஜ்ஞையான, அவனுடைய ஜகத்ப்ரசாஸநத்வப்ரதிபாதகமானவென்றபடி. திருவிண்ணகர்பத்தும் - திருவிண்ணகர்விஷயமான பத்துப்பாட்டையும், வல்லார் - அப்யஸிக்கிறவர்கள், கோணை - வக்ரம், இன்றி - இல்லாமல், அதாவது:— ஸம்ஸாரியாயிருக்கிற இவன் இத்திருவாய்மொழியைக்கற்றமாத்ரத்திலே நித்யஸூரிகளுக்குப் பூஜ்யனாகக்கூடுமோ என்கிற விவாதமில்லாமலென்றபடி. இவ்வர்த்தத்திலிப்படி ஒருவர்க்கும்விவாதம்பண்ண வொண்ணாதென்று கருத்து. ஸர்வதோஷநிவர்த்தகனைப் ப்ராப்யஸகலஸ்வரூபதேசத்திலே போயிருந்தபின்பு ஸாமவேதீயகாநாகாரத்தாலே ஸ்ரீவா விஷ்ணுத்யாநாநுஸந்தாநம்பண்ணுகிற வித்தை இங்கேயிருந்தே சிலர்பெற்றால் ஸம்ஸாரத்திலேயிருக்கச்செய்தே நம்முடையதர்மங்களிவர்க்குண்டாவதேயென்று நித்யஸூரிகள் இவர்களைப்பூஜிக்கையில் விவாதமில்லையிறேயென்று தாத்பர்யம். விண்ணோர்க்கு - நித்யஸூரிகளுக்கு, என்றும் - ஸர்வகாலமும், குரவர்கள் - மாந்யர்களாக, பூஜநீயராகவென்றபடி. ஆவர்—. ॥௧௧॥

ஜ்ஞாநவைராக்யநிஷ்டாநஸேவதயே ஸ்ரீமதேவேதார்த்தஸாராசார்யமஹாதேசிகாய நம:.

---

ஸ்ரீ:

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:

(நல்குரவும்.)

ஸம்பத்தாரித்ர்யபாவாத்ஸுகஸுகக்ருதித:பத்தநாத்ரேச்சபாவாத்
புண்யாபுண்யாதிபாவாத்கபடருஜுதயாஸர்வலோகாதிபாவாத் ।
திவ்யாதிவ்யாங்கபாவாத்ஸாத்த்விகஜநசரண்யஸ்த்ராஸக்ருச்சத்ரூணாம்
சாயாதாபாதிபாவாத்வ்யதித கடகம்ஸம்ப்ரகாசம்ஸ ஸௌரி: ॥௭௨॥

(ஸம்பத்தாரித்ர்யபாவாத்) நல்குரவுஞ்செல்வும் - ஐஸ்வர்யதாரித்ர்யாதிகளைத் தனக்கு விபூதியாக வுடையவனாகையாலும், (ஸுகஸுகக்ருதித:) கண்டவின்பம்துன்பம் - ஸுகது:காதிகளைப்பண்ணுகையாலும், (பத்தநாத்ரேச்சபாவாத்) நகரமுநாடுகளும் - நகராத்ர்யாதிகளை விபூதியாக உடையவனாகையாலும், (புண்யாபுண்யாதிபாவாத்) புண்ணியம்பாவம் - புண்யபாபஸம்ஸ்லேஷவிஸ்லேஷாதிகளைப் பண்ணுகையாலும், (கபடருஜுதயா) கைதவஞ்செம்மை - கபடார்ஜவாதிகளை ப்ரவர்த்திப்பிக்கையாலும், (ஸர்வலோகாதிபாவாத்) மூவுலகங்களுமாயல்லனாய் - லீலாவிபூதியையும் நித்யவிபூதியையும் உடையவனாகையாலும்; (திவ்யாதிவ்யாங்கபாவாத்) பரஞ்சுடருடம்பாயழுக்குப்பதித்தவுடம்பாய் - அப்ராக்ருதவிக்ரஹனைக்கொண்டும் ப்ராக்ருதஜந்துசரீரங்களைக்கொண்டுமிருக்கையாலும், (ஸாத்த்விகஜநசரண்யஸ் த்ராஸக்ருச்சத்ரூணாம்) வன்சரண்சுரர்க்காயசுரர்க்கு வெங்கூற்றமுமாய் - தேவதைகளுக்கு சரண்யனுமாய் தைத்யர்களுக்கு ம்ருத்யுவுமாகையாலும், (சாயாதாபாதிபாவாத்) நிழல்வெய்யில் - சாயாதபாதிகளையுண்டாக்கு

மூ — புகர்கொள்சோதிப்பிரான்றன்செய்கைநினைந்துபுலம்பியென்றும்* நுகரவைகல்வைகப்பெற்றேனெனக்கெ ன்னினிநோவதுவே* ||௩||

நோவவாய்ச்சியுரலோடார்க்கவிரங்கிற்றும்வஞ்சப்பெண்ணைச்* சாவப்பாலுண்டதுமூர்சகடமிறச்சாடிய

ஆ — (நிகரில்) பசுமேய்த்தருளி விளையாடினாப்போலே அநாயாஸேந செய்தருளின அதிமாநுஷ வ்யாபாரங்களை ஸர்வஜ்ஞரான நிரவதிகஸ்நேஹ யுக்தரான பூர்வாசார்யர்கள் நிரவதிகமாக அநுபவித்த சேஷ்டிதங் களையும் அநுஸந்தித்து அவ்வநுஸந்தாநமாத்ரத்தாலே அத்யந்தம் ப்ரீதனாய்க்கொண்டு அலற்றி அநுபவிக்க ப்பெற்றவெனக்கினி யொருநோவுமில்லையென்கிறார். ||௩||

(நோவவாய்ச்சி) உரலோடேகட்டிவைக்கலாம்படி ஸுலபனானபடியையும் சத் ரோயி வதத்தநாஶநம் பண்ணினபடியையும் அதுதுடக்கமாகவுள்ள திவ்யசேஷ்டிதங்களை ஸ்நேஹத்

இ — அதுகாரணமாகவென்கிறார் (பசுமேய்த்தருளி யித்யாதியால்) நிகரில்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செ ய்கிறார் (அதிமானுஷ யித்யாதியால்) சிகரமாகளிறென்கிறதையுரைக்கிறார் (ஸர்வஜ்ஞ யித்யாதியால்) ஸர்வஜ்ஞர் நிரவதிகஸ்நேஹ யுக்தரான பூர்வாசார்யர் ஸ்துதிக்கும் இவைபோல்வனவும்பிறவு மென்கிறதற்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ப்ரீதனாய் யித்யாதியால்) புலம்பி என்கிறவிடத்தில் அர்த்தஸித்தமான அர்த்தத்தையருளிச்செ ய்கிறார் (அநுஸந்தாந மாத்ரத்தாலே யித்யாதியால்) ||௩||

✻ நாலாம்பாட்டு. ✻

நோவவாய்ச்சியுரலோடார்க்க விரங்கிற்றுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உரலோடேயி த்யாதியால்) மனங்குழைந்து என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்நேஹத்தோடேயென்று) ||௪||

ப — றுமுள்ள கெஶிநிரஸநாதிகளும், புகர்கொள் - புகரைக்கொண்டிருக்கிற, புகர் - தேஜஸ்ஸு. 'ஸர்வைஃஸர்வ குணைஷ ஸமாஷ்டாநிகளிலிரோம்" என்றுபூர்வாசார்யர்கள் ஸாதிஸயமாக அநுபவிக் கும்படி ஞானவிஷயமாக விஶேஷத்தை யுடைத்தான வென்றபடி. சோதி - ஜ்யோதிஸ்ஸையுடைய வனான, ஸர்வகாலத்தும் உத்தியத் திவ்ய விக்ரஹத்தையுடையவனானவென்றபடி. பிரான்தன் - உபகாரகனு டைய, செய்கை - சேஷ்டிதங்களை, நினைந்து - அநுஸந்தித்து, புலம்பி - அது உள்ளடங்காதே வாய்விட்டல ற்றிக்கொண்டு. என்றும் - ப்ரதிதிநமும், நுகர - புஜிக்கும்படி, அநுபவிக்கும்படியென்கை. நுகருகை - புஜிக்கை. வைகல் - காலமானது, வைகப்பெற்றேன் - மிகவும் நெடுகப்பெற்றேன், க்ஷுத்பிபாஸாத்யவஸா ரங்களும் மேல்விச்சேதமும் இல்லாமையாலே காலமெல்லாம் இவ்வநுபவத்துக்கே உபயுக்தமாகப்பெற் றேனென்றபடி. இனி - இப்படியானபின்பு, எனக்கு, நோவது - வ்யஸனப்படுவது. என்? - எதற்காக, ஒன்றுக் கும் வ்யஸனப்படவேண்டாவென்றபடி. அநுபவகாலமில்லாமல் வ்யஸனப்பட வேணுமோ? அநுபவம் ஸாவஸமல்லாமல் வ்யஸனப்படவேணுமோ? என்றபடி. * * * ||௩||

நோவ - நோவும்படி, ஆழ்வார்தம்முடைய திருமேனியிலே கயிறுறுத்தினாப்போலேயிருக்கையாலே நோவவென்கிறார். ஆய்ச்சி - இடைச்சியானவள், யஶோதைப்பிராட்டியானவளென்றபடி. உரலோடு - உ லூகலத்தோடே, ஆர்க்க - இறுக்கக்கட்டினவாறே, இரங்கிற்றும் - இரங்கினதும், ஸுகமாயிருந்ததுவு மென்றபடி. இரக்கம் - தைந்யமெ, ஸ்வாதந்த்ர்யம் ஸகலத்தையும் ப்ரஹ்மாண்டகோடி மனனை தான் ஓர் அபலை கட்டின கட்டவிழ்த்துக்கொண்டுபோகமாட்டாதே நின்றழுகைஸ்வபாவமாயிரு ந்த ஸௌலப்யமென்றபடி. வஞ்சப்பெண்ணை - மாத்ருவேஷத்தைக்கொண்டு வஞ்சகியாய்வந்தபெண்ணை, பூதனையையென்றபடி. சாவ - சாம்படி, ஸம்ஹாரியைப்போலே ஸம்ஹாரம்பண்ணிவிட் டு பூதனையினைப்பியாதே அவள்முடிந்தேபோம்படியாகவென்றபடி. பால் - ஸ்தந்யத்தை, உண்டதும் - பான ம்பண்ணினதுவும், பெண்ணைப்பாலுண்டதுமென்று த்விகர்மகமும் ஒருமிவப்ரயோகம். நற்றாய்க்கு ஸஹ்ய னாயிருந்தாப்போலே பேய்த்தாய்க்குமவன் ஸஹ்யனாயிருந்துவிடாதொழியப்பெற்றேனென்றுகருத்து. ஊர் - ஸஞ்சாரவேஶத்தாலேஸ்வபாவ ஊர்ந்துவாராநின்ற, சகடம் - ஶகடமானது, இற - முறியும்படி, இறுகை - முறிகை, சாடியதும் - சாடினதுவும், திருவடியாலேயுதைத்ததுமாகிறவென்றபடி. இதுச்குச்செய்கையென்கி

மூ— துந் *தேவக்கோலப்பிரான்றன்செய்கை நினைந்து மனங்குழைந்து* மேவக்காலங்கள் கூடினேனெனக்கெ
னினிவேண்டுவதே* ॥ச॥

வேண்டித்தேவரிரக்கவந்து பிறந்ததும் வீங்கிருள்வாய்* பூண்டன்றன்னைப்புலம்பப்போயங்கோராய்க்கு
லம்புக்கதும்* காண்டலின்றிவளர்ந்து கஞ்சனைத்துஞ்சவஞ்சஞ்செய்ததும்* ஈண்டுநானலற்றப்பெற்றேனெ
னக்கென்னிகலுளதே* ॥ரு॥

ஆ— தோடே ஸம்ஶ்லேஷிக்கப்பெற்ற வெனக்கினிவேண்டுவதுண்டோவென்கிறார். ॥ச

(வேண்டி) ஸம்ஸார நிவர்த்தநார்த்தமாக ஸந்நிதியிலேவந்து திருவவதாரம்பண்ணியருளவேணுமெ
ன்று தேவர்கள் ப்ரார்த்திக்கத் தானுசைப்பட்டுக்கொண்டு ஸ்ரீவஸுதேவர் திருமாளிகையிலேவந்து பிறந்தருளி
னபடியையும் "துராத்மாவான கம்ஸன்காணிற்செய்வதென்" என்று ஸ்ரீவஸுதேவரும் தேவகிப்பிராட்டியும்
ஸம்ப்ரமப்பட்டலற்ற அவர்களுடைய பயம்போம்படியாக ஸகல ஸம்ஶ்லேஷ ஸம்பூர்ணமான ஸ்வாதுர்த்திலே
தன்னுடைய ஸகல ஸம்ஶ்லேஷ்யத்வ ப்ரகாஶகமாகத் திருவாய்ப்பாடியிலே யெழுந்தருளினப
டியும் அங்கே கம்ஸப்ரப்ருதிகள் அறியாதபடி வளர்ந்தருளி கஞ்சனைத் துஞ்சவஞ்சஞ்செய்ததும் இவை

*ஐந்தாம்பாட்டு.*

இ— தேவரிரக்க என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஸாரேத்யாதியால்) வேண்டியென்கிறதை
யுரைக்கிறார் (தானுசைப்பட்டுக்கொண்டென்று) அன்னைபுலம்பவென்று ஸ்ரீதேவகியைச்சொன்னது ஸ்ரீவ
ஸுதேவருக்கும் உபலக்ஷணமென்றுகருத்தாலே அருளிச்செய்கிறார் (ஸ்ரீவஸுதேவருமித்யாதியால்) வீங்
கிருள்வாயென்கிறவிடத்தில் ஸம்ஸாரமான ஸகலத்தை யருளிச்செய்கிறார் (அவர்களுடையவித்யாதியால்)
வீங்கிருள்வாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸகலஸம்ஶ்லேஷேத்யாதியால்) ஆய்க்குலம்புக்கது
மென்கிறவிடத்தில் ஸம்ஸாரமான ஸகலத்தையருளிச்செய்கிறார். (தன்னுடையவித்யாதியால்) காண்டலி
ன்றியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கம்ஸேத்யாதியால்) இகலுளதேஎன்கிறதற்குத் தாத்பர்ய—

ப— தோடே ஸம்பம். தேவக்கோல- தேவஸௌந்தர்யத்தையுடையவனுடைய, இவையெல்லாம் ப்ராக்ருததேஹத்தை
பரிக்ரஹித்துச்செய்கையன்றிக்கே ஸ்வாபாவிகதிவ்யமங்களவிக்ரஹவானாயிருந்தே செய்தவனென்றபடி.
பிரான்தன் - உபகாரகனுடைய, செய்கை - சேஷ்டிதங்களை, நினைந்து - அநுஸந்தித்து, மனங்குழைந்து-
உருகாநின்ற ஹ்ருதயமாய். மேவ - கூடிக்கும்படி, இதுவே போஜநமாயிருக்கும்படியென்கை. காலங்க
ள்கூடினேன் - காலங்கள்கழிக்கப்பெற்றேன், இனி - இப்படியானபின்பு, எனக்குவேண்டுவதுஎன்? - எனக்
கு ஸாதவ்யமேது? இவ்வநுபவமே பரமபுருஷார்த்தமென்றுகருத்து. ॥ச॥

தேவர் - தேவர்கள், இரக்க - யாசிக்க, ஸம்ஸார நிவர்த்தனார்த்தம் அவதரிக்க வேணுமென்று ப்ரார்
த்தித்தவாறே என்றபடி. வேண்டி - 'விதமரோவபாஸேஸ" என்கிறபடியே தானுசைப் பட்டு, வந்து - ஸ்ரீபரா
பயில்நின்றும் ஸ்ரீவஸுதேவர் திருமாளிகையிலே வந்து. பிறந்ததும் - அவதரித்த ஸ்வரூபத்தையும், அன்ற
ன்னை - அன்றைக்குப் பெற்றவளான தாயாரானவள், ஸர்வஸ்வமையான தேவகியானவ ளென்றபடி. பூண்டு-
ஸாதுஸ்நேஹத்தாலே மார்வாகக்கட்டிக்கொண்டு, புலம்ப - கம்ஸன்காணில் செய்வதென்? என்று ப்ரலபித்த
வாறே, இதுக்குப் போய் என்கிறத்தோடே ஸம்பம். வீங்கு - வ்ருத்தியாநிற்கிற, இருள்வாய் - அந்தகாரத்திலே
வாயென்று ஸப்தமிஸமர்த்வயம். போய் - அந்த தேவகியிருந்த காராக்ருஹத்தில்நின்றும் தப்பிப்போய், அங்
கு - அந்த கம்ஸனுடைய தேஶத்துக்குள்ளே, ஓர் - அத்விதீயமான, கம்ஸனுக்குமஞ்சப்படாதே இவனைமறைத்து
வைத்து ரக்ஷிக்கும்படி, அத்விதீயவைபவமான வென்றபடி. ஆய்க்குலம் - கோபகுலத்தை, புக்கதும் - ப்ரவே
ஶித்ததும், காண்டலின்றி - காண்கையில்லாமல், காண்டல் - காண்கை. கம்ஸாதிகள் காணாமல் என்றபடி. வள
ர்ந்து - ஸம்வ்ருத்தனாய். கஞ்சனை - கம்ஸனை, துஞ்ச - நஶிக்கும்படி, துஞ்சுகை - நஶிக்கை. வஞ்சம் - வஞ்சநம்.
செய்ததும் - பண்ணினதையும், ஈண்டு - இப்போது, நானலற்றப்பெற்றேன் - நான் ப்ரீதிவிஶயத்தாலே பி
ன்னையும்பின்னையுஞ்சொல்லப்பெற்றேன், எனக்கு - இப்படிப்பட்ட வெனக்கு, என்ன இகல் - என்னவிரோ
தம். இகலென்றுவிரோதத்துக்குப்பேர். என்னஇகல் என்கிறவிடத்தில் ஸாதுளவகாராமகுண. என்ன ஸம்ஶ்லேஷநா
விரோதமென்றபடி, உளது - உண்டு, ஒரு விரோதமுமில்லையென்றபடி. ॥ரு॥

மூ— பல* மாணியாய் நிலங்கொண்டமாயனென்னப்பன்றன் மாயங்களே* காணுநெஞ்சுடையேனெனக்கினியெ
ன்னகலக்கமுண்டே* ॥௮॥

கலக்கவேழ்கடலேழ்மலையுலகேழுங்கழியக்கடா* யுலகத்தேர்கொடுசென்றமாயமுழுமட்படமற்றும்பல*
வலக்கையாழியிடக்கைச்சங்க மிவையுடைமால்வண்ணனை* மலக்குநாவுடையேற்குமாறுளதோவிம்மண்
ணின்மிசையே* ॥௯॥

ஆ— திவ்யசேஷ்டிதங்களையுமே அநுஸந்திக்கும்நெஞ்சுடையேனானவெனக்கு இனிகலக்கமுண்டோவென்கிறார்॥
(கலக்க) வைதிகஸாரத்ய நாயகமாக வெழுந்தருளுகிறபடியைக்கண்டு பீதிசயத்தாலே வேதாவேதநஸமுத்ரங்களும் க்ஷோபிதமாம்படி ஸகலலோகங்களையும்கழிய ஜராயாவேல திருத் தேரைத்திருநாட்டிலே செல்லக்கடாவியருளின் ஆஸ்சர்யமுழுமட்பட மற்றுமுள்ள ஸகலதிவ்யசேஷ்டிதங்களையும் ஆச்ரிதவாத்ஸல்யஸூசகமாவதுகையாலே ததிரோபிதஸாதநமாக சங்கசக்ராதி ஸகலதிவ்யாயுத ங்களையும் ஏந்திக்கொண்டிருக்கிற அழகையும் எம்பெருமானையும்கூட வீடழிக்கும்படி செவிக்கினியசெஞ்சொ ல்லாலேத்தப்பெற்ற வென்னோடொப்பாருளரோ? இந்தலோகத்திலென்கிறார். ॥௯॥

இ— ஸம்ஸாரிகளான ஸாத்விகங்களைச்செய்கையாலும் க்ருஷ்ணாவதாரத்தோடொத்திருக்கையாலே ஸ்ரீவாமநாவதாரத்தை இங்கேயநுஸந்திக்கை யுசிதமென்றுகருத்து. ॥௮॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

ஏழ்கடலேழ்மலையுலகேழும்கலக்கவென்றநயித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார்(வைதிகேத்யாதியால்)ஏழ் கடலித்யாதிவாக்யத்தைக் காகாக்ஷிந்யாயேந கழியவென்கிறவதத்தோடேயும் அந்வயித்துத்தாத்பர்யமருளிச் செய்கிறார்(ஸவேத்யாதியால்)உலக்கவென்கிறதற்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருநாட்டிலேசெல்லவென்று) திவ்யசேஷ்டிதங்களையுமென்கிறதற்கு அழகையுமென்கிறதோடே அந்வயம். த்ருதீயபாதத்துக்குத் தாத்பர்யமருளிச்செ ய்கிறார்(ஆச்ரிதவாத்ஸல்யேத்யாதியால்) அழகையுமென்கிறதற்கு ஏற்றப்பெத்த என்கிறதோடே அந்வயம் மலக்குநா வுடையேற்குஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானையுமித்யாதியால்) வீடழிக்கை- விகாரக்கு க்குகை, மாறுளதோ விம்மண்ணின்மிசையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒப்பாரித்யாதியால்) ॥௯॥

ஶ— விசேஷணம். மாணியாய்- ப்ரஹ்மசாரியாய், வாமநப்ரஹ்மசாரியாயென்றபடி. நிலம் - ப்ருதிவியை, கொண்ட- மஹாபலிபக்கல் நின்றும் ஸ்வீகரித்தவனை, மாயன்-ஆச்சர்யசேஷ்டிதனை, என்னப்பன்தன்- அந்தவிசித்ரசரித் த்ராலே என்னைவசீகரித்து எனக்குஸ்வாமியானவனுடைய, திருவுலகளக்கிறேமென்றேருவ்யாஜத்தைவிட்டுஅள ந்துகொண்டது தம்மையென்றிருக்கிறார். மாயங்களே- ஆச்சர்யசேஷ்டிதங்களையே, காணும் நெஞ்சுடையேன்- காணும்படியான மநஸ்ஸையுடையேனான எனக்கு, ஆழ்வார் மூடியானேயிற் காரணங்களை யுடையவராகையாலே நெஞ்சுதானே நினைக்கவும் வற்றாய்க் காணவும் வற்றாயிருக்கு மென்று பிள்ளான் பணிக்குமென்று பட்டர்கள் அருளிச்செய்வார்கள். இனி- நெஞ்சு இப்படியானபின்பு,என்னகலக்கமுண்டு- ஒருகலக்கமுமில்லையென்றபடி.॥௮॥

ஏழ்கடல் - ஸப்த ஸமுத்ரங்களும், ஏழ்மலை - ஸப்தகுலாசலங்களும், உலகேழும் - ஸப்த லோகங்க ளும், கலக்க - கலங்க, வைதிகஸாரத்யநாயகமாக எழுந்தருளுகிற அழகைக்கண்டு பீதிசயத்தா லே க்ஷோபிதங்களாம்படி யென்கை. கழிய — இவையெல்லாவற்றையும் அதிக்ரமிக்கும்படி, கடாய் - திருத்தே ரைக் கடாவி, உலக்க - முடிய, திருநாட்டிலேசெல்லும்படியாகவென்றபடி. தேர்கொடு — ரதத்தைக்கொண்டு, சென்றமாயமுழுமட்பட — போனவாச்சர்யமும்முதலாக, மற்றும்பல — இன்னுமநேகங்களும் வைதிகஸாரத்ய ர்களுடைய ஸம்ஸாரநயநம் அக்ஷீவ்ருந்தம் முதலாக மற்றுமுள்ள வாச்சர்யங்களுமென்றபடி. வலக்கை- தக்ஷிணஹஸ்தத்திலே, ஆழி - சக்ரமும், இடக்கை - வாமஹஸ்தத்திலே, சங்கம் - சங்கமும், இவையுடை — இ வையித்தனையு முடையவனான், மால்வண்ணனை - நீலவர்ணனை, மால் - நீலம். மலக்கு - மலங்கப்பண்ணத்தக் கதான, ஹர்ஷாதிசயத்தாலே வ்யாகுலமாம்படி பண்ணத்தக்கதான என்றபடி. நாவுடையேற்கு - நாக்கையு டையவனான வெனக்கு,வாத்ஸல்யாவாரபரிபூர்ணமானதுகலைத்தவிர்த்தவைபவமுடையவனானவெனக்குஎன்றபடி. இம்மண்ணின்மிசை - இந்தமண்மேலே, இந்தலோகத்திலேயென்றபடி.மாறு- எதிர், உளதோ-உண்டோ, ஸர்வஸ்ரு ஷ்டிக்குமேநாஹமாரியாஸ்யுடையார் வேறு ஸ[illegible]யில்லை யென் [illegible] தையை அநுஸந்திக்கிறபடி. ॥௯॥

௰—மண்மிசைப்பெரும்பாரநீங்க வோர்பாரதமாப்பெரும்போர் * பண்ணிமாயங்கள்செய்து சேனையைப்பாழ்பட
நூற்றிட்டுப்போய் * விண்மிசைத்தனதாமமேபுகமேவியசோதிதன்றா * ணண்ணிநான்வணங்கப்பெற்றேனெ
னக்கார்பிறர்நாயகரே * ௰॥

நாயகன்முழுவேழுலகுக்குமாய்முழுவேழுலகுந்தன் * வாயகம்புகவைத்துமிழ்ந்தவையாயவையல்லனுமாம் *

ஆ—(மண்மிசை) பூபாராவதரணார்த்தமாக ஸாக்ஷாத்தாக ஸாரத்யதூத்யாதிகளைப்பண்ணியருளி மஹாபாரதயுத்தத்தைப்பண்ணுவித்து ஸர்வஸேனையையும் நசிப்பித்து ப்ரகாசமான ஜயஜநிதமான ப்ரகாசதேஜஸ்விவிக்ரஹனாய்க்கொண்டு ஸ்வகீயதிவ்யபரமபதத்திலே எழுந்தருளின வெம்பெருமானுடைய ஸர்வதிவ்யாவதாரங்களையும் ஸர்வதிவ்யசேஷ்டிதங்களையும் ஸர்வதிவ்யகல்யாணகுணங்களையும் ஸர்வகாலமும் அநுபவிக்கப்பெற்ற வென்னில் மேற்பட்டாருண்டோவென்கிறார். ௰

(நாயகன்) கீழிரண்டுதிருவாய்மொழியாலும் சொன்ன அர்த்தத்தை நிகமிக்கிறது. நிகிலஸாவதாநிமா [illegible]

✳ பத்தாம்பாட்டு. ✳

இ—மண்மிசைப்பெரும்பாரம் நீங்கவென்கிறதையுரைக்கிறார் (பூபாராவதரணார்த்தமாகவென்று). இதற்கு யுத்தத்தைப்பண்ணுவித்தென்கிறதோடே அந்வயம். மாயங்கள்செய்துஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாக்ஷாத்தாகவென்ற த்வாரியால்) பாரதமாபெரும்போர்பண்ணியென்கிறதையுரைக்கிறார் (மஹாபாரதவென்ற த்வாரியால்) சோதியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ப்ரகாசமென்ற த்வாரியால்) விண்மிசைத்தனதாமமேபுகமேவியவென்கிறதை ஸங்க்ரஹிக்கிறார் (ஸ்வகீயவென்ற த்வாரியால்) தாள்நண்ணிநான்வணங்கப்பெற்றேன்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானுடையவித்வாரியால்). எனக்கார்பிறர்நாயகரே என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார். (என்னிலித்வாரியால்). ௰

✳ நிகமனம். ✳

ப்ரஸ்தாவதாரத்தைச்சொன்ன இத்திருவாய்மொழியை நிகமிக்கிறவிப்பாட்டிலே ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைச் சொல்லுவானேனென்ன அவதாரிப்பிக்கிறார் (கீழித்வாரியால்) கீழ்த்திருவாய்மொழியில் சொன்ன அவதாரவைபவத்தில் ஸ்ரீக்ருதிசயத்தாலே ஸித்தாந்தலோகநத்யாயத்தாலே அத்தைஇங்கேயினைத்து நிகமிக்கிறாரென்றுகருத்து. வாக்யார்த்தத்தாலே கீழ்த்திருவாய்மொழியின் அர்த்தமும், கேசவனென்கிறவிடத்திலே

ப—மண்மிசை - பூமியின்மேலே, பெரும்பாரம் - விஸ்வம்ஸ்ரூபமானவனுக்கும் பொறுக்க வசக்யமாம்படி பெரியதான பாரமானது, நீங்க - நிவ்ருத்தமாம்படி, இதுக்குப்பண்ணியென்கிறத்தோடே அந்வயம். மாயங்கள் - ஆச்சர்யவத்தின்று ஸாக்ஷாத்தாக ஸாரத்யதூத்யாதிகளானசேஷ்டிதங்களைச்செய்து, ஓர் - அத்விதீயமான, பாரதமா என்கிறத்தை மஹாபாரதவென்றுமாற்றி அந்வயிப்பது. மஹாபாரதமாகிற, பெரும்போர் - பெரியயுத்தத்தை, பண்ணி - பண்ணுவித்து, சேனையை - ஸேனையை, பாழ்பட - ஸம்ஹ்ருதசேனையயடையும்படி ஸேனையெல்லாம் நிச்சேஷமாக நசிக்கும்படி யென்கை. நூற்றிட்டு - ஸம்ஹ்ருத்து. உபாயங்களை பண்ணியென்றபடி. போய் - வந்தகார்யம் நிவ்ருத்தமானவாறே இந்தஸம்ஸாரமண்டலத்தை விட்டுப்போய், விண்மிசை - ஆகாசத்தின்மேலே, பரமபதத்திலே யென்றபடி. தனதாமமே - தனக்கஸாதாரணமானஸ்தானத்தையே, புக - ப்ரவேசிக்க, மேவிய - ஆசரித்தவனை, ஆசரித்துப்ரவேசித்தவனையென்றபடி. சோதிதன் - நிரதிசய தீப்தியுக்தனான க்ருஷ்ணனுடைய, தாள் - திருவடிகளை, நண்ணி - கிட்டி, நான் வணங்கப்பெற்றேன் - நான் சேஷவ்ருத்திகளைப்பண்ணப்பெற்றேன், எனக்கு - ஸர்வஸ்வியனானவெனக்கு, பிறர் - அந்யர் - நாயகர், பெரியவர், ஆர், எனக்குமேற்பட்டாரொருவருமில்லையென்றபடி. * * ௰

முழு - க்ருத்ஸ்நங்களான, எழுலகுக்கும் - ஸப்தலோகங்களுக்கும், நாயகனாய், - ஸ்வாமியாய், முழுவேழுலகும் - க்ருத்ஸ்நங்களான ஸப்தலோகங்களையும், தன்வாய் - தன் வதநத்தினுடைய, அகம் - உள்ளே, புகவைத்து - ஜடரத்திலே ப்ரவேசிக்கும்படி வைத்தும், ஜடரத்திலே ப்ரவேசிக்கும்படி தன்வதநத்திலே வைத்தென்றபடி. ப்ரளயகாலத்திலே நிக்ரஹம் பண்ணியென்று வ்யக்தவிவக்ஷிதார்த்தம். உமிழ்ந்து - உத்கிரணம் பண்ணி, ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே ஸ்ருஷ்டித்தென்றபடி. அவையாய், அந்த ஸப்தலோகங்களுமாய், தத்ப்ரகா [illegible] ரனென்றபடி. அவையல்லனுமாம் - தத்விஜாதீயனுமாகாநிற்கிற, தத்கதோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனுமாகாநிற்கிற

மூ— கேசவனடியிணைமிசைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன * தூயவாயிரத்திப்பத்தாற்பத்தராவர்துவ ளின்றியே * ॥கக॥

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

ஆ— ஏவம்ப்ரகாரேண நிகில ஸ்வாமித்வாதிகளாலே ஸர்வஸ்வாமித்வ ஸம்பந்தத்தையுடையனாய், ஸ்ரீமந் நாராயணனான ஸ்ரீக்ருஷ்ணாவதார திவ்யசேஷ்டிதங்களை எம்பெருமானைச்சொன்ன ஆயிரத்துளித் திருவாய்மொழிவல்லவர்களை யித்திருவாய்மொழிதானே ஸர்வேஸ்வரன் திவ்ய சரணாரவிந்த கைங்கர்ய ஸாம்ராஜ்ய ப்ரதிபாதன நிரதிசய ப்ரேமயுக்தாக்குமென்கிறார். ॥கக॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான்திருவடிகளே சரணம்.

இ— இத்திருவாய்மொழியின் ஸங்க்ரஹம் ஸம்க்ருஹீதமாகிறதென்றுக்கருத்து. முழுவேழுலகுந்தன்வாயகம் புகவைத்துமிழ்ந்த என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிகிலேத்யாதியால்) அவையாய் என்கிற ஸாமாநாதிகரண்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிஜஸங்கல்பத்தாலே) அவையல்லனுமாயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிகிலஸ்வரூபத்தாலே) ஸ்வரூபம் நிகிலவிலக்ஷணமான ஸ்வரூபம், நாயகன்முழுவேழுலகுக்குமாய்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார். (ஸமஸ்தேத்யாதியால்) கேசிஹந்தாவான கேசவஸ்வரூபம் க்ருஷ்ணாவதாரத்தபடியை ப்ரகாசிப்பித்துக்கொண்டு ஸர்வாவதார திவ்யசேஷ்டிதங்களையும் அநுஸந்திக்கிறதென்று நினைத்தருளிச்செய்கிறார் (ஸ்ரீமதேத்யாதியால்) தத்ஸ்ரீயவாசத்தி லக்ஷ்மீவிஸ்தாரத்தையருளிச்செய்கிறார் (இத்திருவாய்மொழிவல்லவர்களையென்று) இப்பத்தால் பத்தராவர் என்கிற இவ்வசனவ்யக்தியாலே வ்யஞ்ஜிதமாகிறவர்த்தத்தை யருளிச்செய்கிறார் (இத்திருவாய்மொழிதானேயென்று) துவளின்றியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிகிலஸ்வரூபஸ்வபாவேத்யாதியால) பத்தராவாரென்றது — ஸம்ஸாரஸாகரவஸிஷ்டர் ஸக்தராமென்றுகாட்டுகிறார் (பரமேத்யாதியால்) ॥கக॥

ப— வென்றபடி. கேசவனடி - கேசிஹந்தாவான க்ருஷ்ணனுடையதிருவடிகளுடைய, இணைமிசை - யுகளத்தின்மேலே, க்ருஷ்ணசரணயுகள விஷயமாகவென்றபடி. குருகூர்ச்சடகோபன்சொன்ன — ஸ்பஷ்டம். ஆயிரத்துள— ஸஹஸ்ரத்தில, தூய - பரிசுத்தமான, க்ருஷ்ணாவதார வ்ருத்தாந்தங்களையே சொல்லுகையாலே சுத்தஸ்வபாவமானவென்றபடி. இப்பத்தால் - இந்த தசகத்தால், இதுக்குப்பத்தராவர் என்கிறதோடேயம். துவளின்றி - குற்றமிலலாமல், துவள் - குற்றம்- சர்வதிவ்யாதிகங்களொன்றுமில்லாமலென்றபடி. பத்தராவர் - பக்தராவர்கள், இபபத்தைஅப்யஸித்தவர்களென்று சேஷம் * * * ॥கக॥

ஜ்ஞாநவைராக்யநிதயே ஸ்ரீமதே ஸ்ரீநிவாஸராமாநுஜமஹாதேசிகாய நம:.

ஸ்ரீ:.

ஸ்ரீவேதாந்ததேசிகதாத்பர்யரத்நாவளி:.

(குரவை.)

ராஸக்ரீடாதிக்ருத்யை ர்விவிதரஸிகாவாஸநைர் ஜ்ஞாநமுக்யை:
ஸாவீர்யாஹார்யைர்ஜந்யை ர்விவிதஸம்பந்தைர்த்யாதிமுக்யை: ।
ப்ராதுர்பாவைர்விலக்ஷணஸௌந்தர்யஜநநைர் பஹுவிதைர் ஜ்ஞேய:
ராகதேஷ்ட்வவ்யக்தம் ஹரிரிதி கதயாமாஸ காருண்யவக்த்ரம் ॥எக॥

(ராஸக்ரீடாதிக்ருத்யை:) குரவையாய்ச்சியரோடு கோத்ததுமித்யாதி - கோபிமாரோடே குரவை கோத்ததும - கோவர்த்தனத்தையெடுத்ததும் காளியனைக்குதித்ததும் முதலான வ்யாபாரங்களாலும், (விவிதரஸிகாவாஸநை:) கேயத்தீங்குழலூதிற்றும் - நாநாவிதமான மானத்தோடேகூடக் குழலையூதினவைவிதங்களாலும், (ஜ்ஞாநமுக்யை:) கிகரின்முல்லைச்செற்றதும் —மிடுக்கரானஜ்ஞானை ஜயித்தஸாமர்த்யத்தாலும், (மஹாவீர்யாஹார்யைர்) நோவவாய்ச்சி யுரலோடார்க்கவிரங்கிற்றும் - யசோதை யுரலோடே கட்டும்படியிருந்த ஸௌலப்யத்தாலும், (ஸஜ்ஜநஜநப்ரீதை:) வேண்டித்தேவரித்யாதி - தேவர்கள்ப்ரார்த்திக்க

மூ—துவளில்மாமணிமாடமோங்கு தொலைவில்லிமங்கலந்தொழு* மிவளைநீரினியன்னைமீருமக்காசையில்லைவிடுமினோ* தவளவொண்சங்குசக்கரமென்றுந்தாமரைத்தடங்கணென்றும்*

ஆ—தொலைவில்லிமங்கலத்தில் எம்பெருமானைக்காணவேணுமென்று ஆசைப்பட்டுப்பெருமையாலே அத்யந்தபரவசையாய் அவனுடைய ஸௌந்தர்யாதிகுணங்களையும் திவ்யவிக்ரஹங்களையும் திவ்யசேஷ்டிதங்களையும் திருத்தொலைவில்லிமங்கலத்தையும் சொல்லி அலற்றுகிறபடியைக்கண்டு இவளுடைய திருத்தாயாரும் பந்துக்களும் இவளையிழக்கிறோமென்னும்பயத்தாலே இவளுக்கவன்பக்கலுள்ள அதிநிர்பந்தத்தை நிவர்த்திப்பிக்கவேணுமென்று இவளுடைய தோழியை அபேக்ஷிக்க; இவளுமவர்களைநோக்கி நிரவத்யநிரதிசயவிலக்ஷணரான நிகரவிரவித்ஸளபொவேதமான திருத்தொலைவில்லிமங்கலத்தைத்தொழுகையே ஸ்வபாவமாயிருக்கிற இவள் அவனுடைய அதிநிர்மலமாய் அதிரமணீயமாயிருந்த திருச்சங்குதிருவாழியாகிற திவ்யவிக்ரஹங்களையும் வாம்பரீகமொவஙங்களையும் சொல்லியலற்றி அத்தாமரைகளின்நிழலிலே வளர்க்கடவ குவளைபோலேயிருந்த அழகியகண்கள்

மேல்முதற்பாட்டுக்கு வ்யாக்யானம்.

இ—துவளில்என்கிறதையுரைக்கிறார் (நிரவத்யவென்று) மாசப்தத்தையுரைக்கிறார் (நிரதிசயவென்று) மணிசப்தம் ஸர்வாத்மகமாகையாலே ஸுவர்ணரஜதாதிவாசகமென்றுகாட்டுகிறார் (விவிதேத்யாதியால்) இத்திருவாய்மொழியிலே ஆழ்வார் ப்ரக்ருதி சொல்லப்படுகிறதென்று நம்முதலிகளெல்லாம் இத்திருவாய்மொழியைப் பேரவிரும்பியிருப்பார்களென்று பூஜிப்பிக்கைக்காகப்பாட்டுத்தோறும் அதிரமணீயஸாகாராரவிந்த வடிவஸந்தானங்களாலே வ்யாக்யானஞ்செய்தருளுகிறார். தவளவொண்சங்குஎன்கிறதையுரைக்கிறார் (நிர்மலமித்யாதியால்) குவளையொண்மலர் என்கிறவிடத்தில் ஒண்சப்தத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அத்தாமரையித்யாதியால்)

ஸ—துவளில் - துவளில்லாத, துவள் - தோஷம், நிரவத்யங்களானவென்றபடி. மா - மஹத்துக்களான, நிரதிசயகாந்திமாலிகளானவென்றபடி. மணிமாடம் - ரத்நங்களாலே ரசிதமானஸதநங்கள், ஓங்கு - உந்நதங்களாயிருக்கிற, அவ்வூருக்கு ஸந்நிக்ருஷ்டமாகையாலே விச்லேஷித்தபோது தொடங்கி அவ்வூரையும் அவ்வூரில் மாடங்களையும் அவற்றில் மாணிக்கங்களையும் பார்த்துக்கொண்டு வைத்தகண்வாங்கமாட்டாதே யிருக்கிறாளென்று இவ்விசேஷணங்களுக்கு அபிப்ராயம். தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலமென்கிற திவ்யநகரத்தை, தொழுமிவளை - தொழுகையேஸ்வபாவமாயிருக்கிற இவளை, "ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநம்," என்கிறகணக்கிலே தொழுகையே தேஹயாத்ரையாயிருக்கிற இவளையென்றபடி. இது ஸாபிப்ராயவிசேஷணம். இத்தனை அதிநிர்பந்தையான இவளை நிவர்த்திப்பிக்கப்போமோவென்றபிப்ராயம். இதுக்கு விடுங்கோளென்கிறத்தோடே அந்வயம். அன்னைமீர் - தாய்மார்காள், ஸ்வவிஷயத்திலே அபேக்ஷிக்கையென்றொன்றில்லையோ? கேவலம் சரீரத்தை யுண்டாக்கினரை அநுவர்த்திக்கையே பரமதர்மமோ? என்று ஸம்போதநத்துக்குக்கருத்து. நீர்- ஆதியிலே இவளைக்கொண்டுபோய்த்தொலைவில்லிமங்கலத்திலழக்கைக்காட்டின நீங்கள், விடுமினோ - விடுங்கோள், இவளைவிடுகையாவது - இவளுங்களுக்குவியையென்கிற வாஸியை விடுங்கோள்என்றபடி. இவளுடைய அநுபவத்துக்குத்தண்ணீர்த்துரும்பாகாதே இவளுக்கோடுகிற ரஸத்தைக்கண்டுகொண்டு நிற்கப்பாருங்கோளென்று கருத்து- இனி-இவள் அத்யந்த ப்ரவணையானபின்பு, தொழுகையே தேஹயாத்ரையாவதற்குமுன்னேயன்றோ மீட்கப்பார்ப்பதென்றுகருத்து. உமக்கு - தாய்மாரான உங்களுக்கு, ஆசையில்லை, இவளைஆசைப்பட அவகாசமுமில்லை? ப்ராப்தியுமில்லை யென்றபடி. ப்ராப்தியுளவனே நகளாலே பக்கல் பெற்றவர்களுக்கு ப்ராப்தியுண்டோ? புக்கவிடத்தே ப்ரவணைகளாகா நிற்பாரைப்பெற்றவர்கள் நாங்கள் என்கிறதைக்கொண்டு நிவர்த்திப்பிக்கை யுசிதமோவென்றுகருத்து. இப்படி இவளைஆசைப்பட அவகாசமில்லையென்கிறதெத்தாலேயென்ன? இவளுடைய ப்ரதேசங்களைப்பார்க்கவொட்டாதோ வென்றவற்றைச் சொல்லுகிறாள். தவள - தவளமான, ஸ்வச்சமான, அவன் திருமேனிக்குப் பரபாகமாம்படி தவளமானவென்றபடி. ஒண் - ஒள்ளியதான, "உண்பதுசொல்லி லுலகளந்தான் வாயமுதங்கண்படைகொள்ளில் கடல்வண்ணன் கைத்தலத்தே" என்றுபிராட்டிமார் கொண்டாடும்படி அதிசயிதமான வென்றபடி. சங்கு - சங்கம், சக்கரம் - இப்படியொருவிசேஷணமிட்டுச் சொல்லவொண்ணாதவழகையுடைய சக்ரம், என்றும- இப்படிசொல்லியும், தாமரைத்தடங்கள் - சாரஸவைஷம்போலே

மூ—நிமியும் வாயொடுகண்கணீர்மல்க நெக்கொசிந்துகரையுமே* ।௩।
கரைகொள்பைம்பொழிற்றண்பணைத் தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக* உரைகொளின்மொழியாளை நீருமக்காசையின்றியகற்றினீர்* திரைகொள்பௌவத்துச்சேர்ந்ததும் திசைஞாலந்தாவியளந்ததும்*

ஆ—சொல்லிக்கொண்டழுது நெக்கொசிந்து நீராயுருகாநிற்கும், ஆதலால் அங்கேகொண்டுபுக்கு வலிய இழந்திகோள், இனி இவளை ஆசைப்பட்டால் கிடைக்குமோவென்கிருள். ।௩।

(கரைகொள்) அதிஶோபாவஹஶிலாஹர்ம்யாதிஸகல விடபவிராஜித ஸந்ததஸ்யந்தமானாதிநிர்மலஸலிலஸம்பன்னத்தைப்புடைத்தான தொலைவில்லிமங்கலத்திலே கொண்டுபுக்க அன்று தொடங்கி அவனைப்பிரிந்தவ்யஸனத்தாலே அத்யந்தஹிம்ஸைகொண்டு அத்யந்தஶோபமான சொற்களாலே திருப்பாற்கடலிலே.

இ—மருளிச்செய்கிறார் (ஆதலாலித்யாதியால்) வலியவென்றது வலுவிலென்றபடி. உமக்காசையின்றியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இனிஇவளைமித்யாதியால்). ।௩।

✳ மூன்றும்பாட்டு. ✳

தண்பணையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதிஶோபாவஹேத்யாதியால்) பைம்பொழிலென்கிறதைவிவரிக்கிறார் (ஸகலேத்யாதியால்) கரைகொள்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸலிலேத்யாதியால்) இத்தால் திருநாளிலேதான் கொண்டுபோகவேண்டினுல் அவ்வூரில் திருச்சோலையுள்ளிட்டுக்கொண்டு போவாருண்டோ? இவளை அத்திருச்சோலைபுள்ளாகக்கொண்டுபோய்க்கெடுத்திகோளென்கிருளென்று ஸாமர்த்யஸித்தமான அர்த்தத்திலே ஶப்தஸித்தமான அர்த்தத்தையருளிச்செய்கிறார் (அன்றுதொடங்கியித்யாதியால்). உரைகொளின்மொழியாளையென்றதை நினைத்தருளிச்செய்கிறார் (அத்யந்தஶோபமித்யாதியால்) பௌவத்துசேர்ந்ததுமென்கிறத்தையுரைக்கிறார் (திருப்பாற்கடலிலேயித்யாதியால்) திரைகள்மேய்த்தது

ப—அநுபவிக்கக்கொடுக்கிற உபகாரகனென்றேசொல்லி, இதுக்குமேல் சொல்லமாட்டாதே இவ்வளவே சொல்லியென்றிவ்வவதாரணத்துக்குத் தாத்பர்யம். நிமியும் வாயொடு - உகடுநெளியாநிற்கிறவாயோடே, நிமிதல் - நெளிதல், கண்கணீர் - நேத்ரஜலங்கள், மல்க - ப்ரவஹிக்கும்படி, நெக்கு - நெகிழ்ந்து, ஆத்யந்திகமயத்தாலே ஹ்ருதயம் ஶைதில்யம் நெகிழ்ந்து என்றபடி. ஒசிந்து - அநேகம் ப்ரஶிதிலமாய், கரையும் - நீரயுருகாநின்ருள். * * * ।௩।

தண் - ஶீதளங்களான, வாத்ஸல்யஹாஸ்யஹேதுகஶீதளங்களானவென்றபடி. பணை - பணைத்த, ஶாகைகளை யுடையவையான வென்றபடி. கரைகொள் - கரைகளைக்கொண்டிருக்கிற, கரை - பர்யந்தப்ரதேஶம். பர்யந்தப்ரதேஶங்களையெல்லாம் வ்யாபித்துக்கொண்டிருக்கிற வென்றபடி. பைம் - பச்சைகளான, அதிஶீதளபாஶீதளங்களானவென்றபடி. பொழில் - உத்யானங்களையுடைத்தான, தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலமென்கிற திவ்யநகரத்திலே, கொண்டுபுக்கு - இவளைக் கொண்டுபோய் ப்ரவேஶித்து இதுக்கு அகற்றினீர் என்கிறத்தோடே அந்வயம். உரைகொள் - உரைகொள்ளப் படுகிறதான, அத்யந்தபோக்யம் போகாதே ஶ்ரோத்ரமே கேட்டநுபவிக்கப் படுகிறதான வென்றபடி. இன் - போக்யமான, அர்த்தமிருக்க ஶ்ரோத்ரமே கேட்டநுபவிக்கும்படி அதிபோக்யமானவென்றபடி. மொழியாளை - பாஷணத்தையுடையவளான இவளை, நீர் - இவள்ப்ரக்ருதியையறிந்திருந்த நீங்களை, உமக்காசையின்றி - இவள்பக்கல் உங்களுக்கு ஆசையில்லாமல், ஆசை யுண்டாளுல் இப்படி செய்வீர்களோ இவளை அவ்வூரிலே கொண்டுபுகுகையென்றும் இவள் பக்கலாசையில்லாமையென்றும் பர்யாயம். இவள் வேண்டாமென்றன்ரே நீங்கள் இவளை அங்கேகொண்டுபுக்கதென்றுகருத்து. அகற்றினீர் - விஶ்லேஷிப்பித்திகோள், அகலுகை - விஶ்லேஷிக்கை. இவள் உங்களோடுறவற்று விஶ்லேஷித்துப்போம்படி பண்ணிக்கொண்டிகோளென்றபடி. இவளிப்படியானதுக்கு ஹேதுவாகமெதென்னச் சொல்லுகிருள். திரைகொள் - திரையைக்கொண்டிருக்கிற, திரை - தரங்கம், உத்துங்கதரங்கஜநிதஶ்ராந்தபஹுஶோபித தரங்கதரணவிதமான வென்றபடி. பௌவத்து - க்ஷீரஸமுத்ரத்திலே, பௌவம் - ஸமுத்ரம். சேர்ந்ததும் - ப்ரஹ்மாதிகள் கூக்குரல் கேட்கும்படியாகக் கண்வளர்ந்ததும், திசைஞாலம் - திக்குக்களோடே கூடின ப்ருதிவியை, தாவியளந்ததும் - திருவடிகளைநீட்டி அளந்தது

மூ— நிரைகள்மேய்த்ததுமே பிதற்றி நெடுங்கண்ணீர்மல்கநிற்குமே* ॥௩॥
நிற்குநான்மறைவாணர்வாழ்திருத்தொலைவில்லிமங்கலங்கண்டபின்* அற்கமொன்றுமறவுறாள் மலிந்தாள்கண்
டீரிவளன்னைமீர்* கற்குங்கல்வியெல்லாங்கருங்கடல்வண்ணன்கண்ணபிரானென்றே* ஒற்கமொன்றுமில
ளுகந்துகந்துள்மகிழ்ந்துகுழையுமே* ॥ச॥

---

ஆ— கண்வளர்ந்தருளினபடியையும் இந்தயோகத்தை யனுஸந்தருளினபடியையும் பசுமேய்த்தருளினபடி
யையும் முதலாகவுள்ள திவ்யசேஷ்டிதங்களையே யலற்றி தன்னுடைய திருக்கண்களாலே ப்ரவாஹரூபமான நீர்மல
ராநிற்கும், ஆதலால் அங்கே கொண்டுபுக்கு இவளை வலியவிழந்திகோளென்கிறார். ॥௩॥

(நிற்கும்) ஸ்வரூபாநுரூபமான ஸர்வவ்ருத்தியையுடைய வைதிகர்களான திவ்யாங்கர்கள் வே
தவேத்யமான ஸமஸ்தஸாரத்தையும் ஸாக்ஷாத்கரித்துக்கொண்டு வாழுகிற திருத்
தொலைவில்லிமங்கலத்தைக்கண்டபின் ஸ்ரீஸ்வரூபாநுகூலமான ஸ்தைர்யத்தைக்கடந்து ஒருவர்க்கும் விதேயை
யன்றியே சொல்லுஞ்சொல்லெல்லாம் கருங்கடல்வண்ணன் கண்ணபிரானென்றே யெப்போதுஞ்சொல்லி
ஒருக்லாந்தியுமின்றியே அவன் திருநாமங்களைச்சொல்லச்சொல்ல மேன்மேலெனவந்த ஸ்ரீதிவ்யானந்தத்தாலே

---

இ— மென்கிறதையுரைக்கிறார் (பசுவித்யாதியால்) இது உடைய லக்ஷணமென்றுகாட்டுகிறார் (முதலாகவித்யா
தியால்) நெடுங்கண்ணென்று கண்ணைவிசேஷித்ததற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னுடையவித்யாதி
யால்) பரப்பு - விஸ்தாரம், மாறும்படி - ப்ரவாஹங்களாலே ரூபாந்தரமாம்படி, த்வதீயபாதத்துக்குத் தாத்பர்ய
மருளிச்செய்கிறார் (ஆதலாலித்யாதியால) வலியவென்றது - வலுவிலென்றபடி. ॥௩॥

✳ நாலாம்பாட்டு. ✳

நிற்குமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வரூபாநுரூபமென்று) இத்தால் ஸர்வதாத்பர்யமரு
ளிச்செய்கிறார் (நிஷ்டாநிஷ்டரென்று) நான்மறைவாணரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமஸ்த
வேதத்யாதியால்) வாழென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேதவேத்யமித்யாதியால்) அற்கமொன்று
மறவுறாளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீமேகுத்யாதியால்) மலிந்தாள்கண்டீரென்கிறதற்குத்
தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒருவர்க்குமித்யாதியால்) கற்குங்கல்வியெல்லாமென்கிறதற்குத் தாத்பர்யமரு
ளிச்செய்கிறார் (சொல்லுமித்யாதியால்) ஒற்கமொன்றுமிலளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஒரு
க்லாந்தியுமித்யாதியால்) உகந்துகந்து என்கிறவிசேஷத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவன்திருநாமங்க

---

ப— கொண்டதும், நிரைகள்மேய்த்ததுமே - பசுக்களை மேய்த்ததுமே, ஸம்யாரணம் இவளுக்குநம்மோடு ஸம்ச்லே
ஷணமில்லைகண்டிகோளென்று வ்யஜிப்பிக்கைக்காக பிதற்றி- பொருளந்யத்தாலே க்ரமமாக ஸம்லபித்து,
நெடுங்கண் - அதிவிஸ்தாரமான விசேஷணங்கள், இவையிரண்டும் ஸ்ரீபஸாதாங்கமென்னலாம்படி அதிவிஸ்தா
ரங்களான இக்கண்களுங்கூடும் - பரிணாமமாம்படி பாஷ்பமுண்டாவதே! யென்றுகருத்து. நீர்மல்க - ஜலம்
ப்ரவஹிக்கும்படி, நிற்கும்- நில்லாநின்றாள் பிதற்றவும் க்ஷமையன்றியே ஸ்தம்பையாகாநின்றாளென்றபடி. ॥௩॥

அன்னைமீர் - தாய்மார்காள்? இவள், நிற்கும் - நிற்கத்தக்கவையான, ஸ்வரூபாநுரூபமான நிஷ்டைகளான
வென்றபடி. நான்மறை - நாலுவேதங்களுக்கு, வாணர் - நிர்வாஹகரான ஸ்ரீவைஷ்ணவர்கள், வாழ் - வாழா
நிற்கிற, ஸமஸ்தஸம்பத்தாலே ஸம்ருத்தமாகநிற்கிறவென்றபடி. தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்
லிமங்கலமென்கிற திவ்யதேசத்தை, கண்டபின் - கண்டபின்பு, அற்கம் - ஸ்ரீஸ்வாதந்த்ர்யமான அடக்கத்தை,
அற்கம் - அடக்கம், ஒன்றும் - லேசத்தும், அற - மிகவும் உறாள் - அடையாநிற்கிறாளில்லை, மலிந்தாள்க
ண்டீர் - நம்மைமயிஞ்சினாள்கிடீர், நமக்கு விதேயையாகாதொழிந்தாளென்றபடி. கற்குங்கல்வியெல்லாம் - அப்யா
ஸிக்கிறவார்த்தைகளெல்லாம், அப்யஸிக்கிறபோலே ஸ்வஸூக்தாகச்சொல்லுகிற வார்த்தைகளெல்லாமெ
ன்றபடி. இதுக்கு என்றே என்கிறதோடே ஸ்வயம். கருங்கடல்வண்ணன் - நீலஸமுத்ரவர்ணனான, கண்ண
பிரான் - க்ருஷ்ணனாய்த்தனவடிவழகை என்னையநுபவிப்பித்த உபகாரகன், என்றே - இப்படிசொல்லி, சொ
ல்லும் வார்த்தையெல்லாம் இப்படியேசொல்லியென்றபடி. ஒற்கம்- க்லாந்தி, ஒன்றும்- லேசத்தும், இலள்-
இல்லாதவள், உகந்துகந்து - ஸந்தோஷித்து, ஸந்தோஷித்து திருநாமம் சொல்லுகிறத்தாலே உத்தரோத்தர
ஸ்ரீதியாநந்தையாயென்றபடி. உள்மகிழ்ந்து-உள்ளேமிகவும் ஸந்தோஷித்து, குழையும்-ஸிதிலையாகாநின்றாள்.॥

மூ — குழையும்வாண்முகத்தேழையைத்தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்* கிழைகொள்சோதிசெந்தாமரைக்
கட்பிரானிருந்தமைகாட்டினீர்* மழைபெய்தாலொக்குங்கண்ணநீரினொ டன்றுதொட்டுமையார்ந

ஆ — அத்ருஷ்டவஸமன்றியாகாநின்றாள், இப்படி அவன்திறத்தில் அபிநிவிஷ்டையான இவளை யென்னால் நிவர்த்திப்பிக்கவொண்ணாதென்கிறாள். ॥௪॥

(குழையும்) நிரவதிகஸௌந்தர்யஸௌகுமார்ய ஜந்மபூமியான திருமுகத்தையுடையவளாய் பண்டே எம்பெருமான்திறத்தில் அதிப்ரவணையாயிருந்த இவளைத் திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொண்டு புக்கு தன்னுடைய திவ்யாபரணங்களினுடைய நிரவதிகஜ்யோதிஸ்ஸின்வெள்ளமெல்லாம் தன்னுள்ளே அடங்கும்படி பெருகுகிற நிரவதிகமான ஜ்யோதிஸ்ஸின்வெள்ளத்திலே அபிவ்ருத்தமாய் அலர்ந்ததொரு தாமரைத்தடாகத்தினுடைய குளிர்த்தியையு மழகையுமுடைத்தான திருக்கண்களையுடையனாயிருந்த வெப்பெருமான் எழுந்தருளியிருந்த இருப்பைக்காட்டினீர்; அன்றுதுடங்கி மழைபெய்தாலொக்கும் கண்ணநீரோடு மயங்கி

இ — ளையித்யாதியால்) குழையுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அத்ருஷ்டமித்யாதியால்) பாட்டுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியித்யாதியால்) இதுவேபாட்டுக்குஸங்கதியுமென்றுகண்டுகொள்வது. ॥௪॥

## ✳ ஐந்தாம்பாட்டு ✳

குழையும்வாண்முகத்தென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரவதிகேத்யாதியால்) அதில் ஸௌந்தர்யஶப்தத்தாலே வாள்ஶப்தார்த்தமும் ஸௌகுமார்யஶப்தத்தாலே குழையுமென்கிறதினர்த்தம் விவக்ஷிதம். ஏழையையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பண்டேயித்யாதியால்) இழைகொள்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னுடையவித்யாதியால்) சோதியென்கிறதை ஸர்வத்ரைஷமாக்கிவிவரிக்கிறார் (நிரவதிகமானஜ்யோதிஸ்ஸினித்யாதியால்) வெள்ளத்திலென்கிறதற்கு இருந்தஇருப்பையென்கிறதோடேஅந்வயம். செந்தாமரைக்கட்பிரானிருந்தமையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அபிவ்ருத்தமாயித்யாதியால்) இருந்தவிருப்பைக்காட்டினீர்என்கிறவித்தாலே அவ்வூரில் ஸ்ரீவைஷ்ணவஸம்ருத்தியைக்காட்டினளவன்றிக்கே இவளுக்கு அவ்விடத்திலே எம்பெருமானுடையஅழகையும் காட்டிக்கொடுத்தீகோளென்கிறாளென்று ஸங்கதியும்ஸூசிதை. மையார்ந்தென்கிறதையுரைக்கிறார் (மயங்கியென்று)

ரூ — அன்னைமீர் - தாய்மார்கள், குழையும் - குழையாநிற்கிற, குழைகை - த்ரவமாகை. நிஸர்கஸௌகுமார்யமாயிருக்கிற என்றபடி. வாண்முகத்து - காந்திவர்த்தமானமுகத்தை யுடையவளான, வாள் - காந்தி. வாள்முகமென்று ஶாகபார்த்திவவத்ஸமாஸ:, வாள்முகத்தென்கிறவிடத்திலே ளகாரஸ்யணகாரரேவரே ணகார ஆதேஶ:. வாள்முகத்தையுடையவள் வாண்முகத்தாள். வாண்முகத்தேழையையென்று ஸமஸ்தபதம். ஏழையை - சபலையை, பண்டேஅவன்விஷயத்திலே சபலையாயிருக்கிற இவளை. தொலைவில்லிமங்கலம் - தொலைவில்லிமங்கலமென்கிற திவ்யநகரத்திலே, கொண்டுபுக்கு - கொண்டுபோய்ப்ரவேசித்து, இதுக்குக்காட்டினீர்என்கிறதோடே அந்வயம் இழைகொள் — ஆபரணங்களைக்கொள்ளாநிற்கிற, இழை — ஆபரணம். திருமேனியில் சாற்றியிருக்கிற திவ்யாபரணங்களுடைய காந்திகளையெல்லாம் ஸமுத்ரத்திலே கோஷ்பதம்போலே தன்னுள்ளே அடக்கிக் கொள்ளாநிற்கிற வென்றபடி. சோதி- ஜ்யோதிஸ்ஸிலே, "ஸ்வாப்ரயாதிஸீதலயாகாந்த்யாஸம்ஜ்ஞாதஸ்யகம்" என்னும்படியிருக்கிற ஸ்ரீயகாந்திஸமுத்ரத்திலேயென்றபடி. இதுக்கு இருந்தமை யென்கிறத்தோடேஅந்வயம், செந்தாமரைக்கண் - சாரு தாமரஸ விலோசநனை, ஸம்ஸ்லேஷ ப்ரேமாதிஶயப்ரகாஶகங்களாம்படி அதிரமணீயங்களானவிலோசநங்களை யுடையவனையென்றபடி. பிரான் - "வாஷவிவர்ஷாகாரோ ஜகதாம்" என்கிறபடியே அவ்வடிவழகை ஆஶ்ரிதர்க்காக்கின உபகாரகன், கண்பிரான் என்கிறவிடத்தில் ணகாரநாத்ரேபகாரேடகாராதேஶ:. இருந்தமை- இருந்தபடியை. "சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருரு" வென்கிறபடியே ஸ்ரீயகாந்திஸமுத்ரத்துக்குள்ளே எழுந்தருளியிருந்த வாஸ்தவத்தை யென்றுவ்யாக்யானம். காட்டினீர் — இவளுக்குக் காட்டினீகோள். அன்றுதொட்டு— அன்றுதுடங்கி, மழைபெய்தால்- வர்ஷம் வர்ஷித்தால், ஒக்கும்- ஒவ்வாநிற்கிற, மழைபெய்தாப்போலேயிருக்கிறவென்றபடி. கண்ணநீரினொடு- நேத்ரஜலங்களோடேகூட, மையார்ந்து-மோஹித்து, மையாருகை- மோஹிக்கை.

மூ.—இவ* ளுழையுஞ்சிந்தைய ளன்னைமீர் தொழுமத்திசையுற்றுநோக்கியே* (ரு॥)
நோக்கும்பக்கமெல்லாங்கரும்பொடுசெந்நெலோங்குசெந்தாமரை.* வாய்க்குந்தண்பொருநல்வடகரை
வண்டொலைவில்லிமங்கலம்* நோக்குமேலத்திசையல்லால்மறுநோக்கிலள்வைகல்தொறும்* வாய்க்கொள்
வாசகமு மணிவண்ணனுமமேயிவளன்னைமீர்* (சு॥)

ஆ.— அக்கண்களையே நினைந்து அந்ததிக்கை நோக்கித் தொழாநிற்கும்; இனி இவளை ஆபத்திலே மீட்கப்போகாதென்கிறாள். (ரு॥)

(நோக்கும்) ஸர்வதிக்குகளிலும் கரும்பும் செந்நெலும் செந்தாமரையுமாய்க்கொண்டு பர்யாப்தமாய் ... பொருநல்வடகரை வண்டொலைவில்லிமங்கலத்திலே கொண்டுபுக்கவன்று தொடங்கி கண்களால்நோக்கல்லது காணாள், வாயால் மணிவண்ணனாமமல்லதுசொல்லாள், இனி இவளை மீட்கப்போமோவென்கிறாள். (சு॥)

இ—நுழையுஞ்சிந்தையளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அக்கண்களையே நினைத்தென்று) பாட்டுக்குப் பாவார்த்தமருளிச்செய்கிறார் (இனி இவளைமீட்கவரியதாயிருப்பதால்) (ரு॥)

* ஆறாம்பாட்டு. *

ஸர்வேச்வரனுடைய ஸௌந்தர்யத்தை யருளிச்செய்கிறார் (ஸர்வதிக்காலும்) ... செந்நெலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமைத்ருயில்) ஸ்வர்ணம், ஸர்வஜ்ஞம், ஸாமி, ஸ்ரீ, ஹரி, ஓங்குசெந்தாமரையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வதிக்காலும்) நோக்கும்பக்கமெல்லாமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பர்யாப்தமானவென்று) நோக்குமேலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கொண்டுபுக்கவிதமாலே) அத்திசையல்லாமல் மறுநோக்கிலளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கண்களாலேவிதமாலே) இத்தால் தொழுமத்திசையுற்றுநோக்கி என்று கீழ்ச்சொன்னதைத் ... ஸங்கதி. பாட்டுக்குப் பாவார்த்தமருளிச்செய்கிறார் (இனியிவளைமீட்கவரியதால்) (சு॥)

ப—இவள் - இந்தப்பெண்பிள்ளையானவள், நுழையுஞ் சிந்தையள் - நுழையாநிற்கிற நெஞ்சையுடையவள், சிந்தை - நெஞ்சு, ஸௌந்தர்யத்தாலே அவனுடைய வடிவழகிலே உள்ளுள்ளே நுழையாநிற்கிற நெஞ்சையுடையவளாய்க் கொண்டு என்றபடி. அத்திசை - அந்ததிக்கை, அவனெழுந்தருளியிருக்கிற தொலைவில்லிமங்கலத்தின் திக்கையென்றபடி. உற்று - உறுதியாக, தன்பார்வையெல்லாம் அந்த திக்கிலேதானே ப்ரவணமாம்படியாக வென்றபடி. "ஸர்வமாத்மனி ஸம்பச்யேத்" என்னுமாப்போலே, நோக்கி - பார்த்து, தொழும் - அஞ்ஜலிபண்ணாநின்றாள். * * * * * (ரு॥)

அன்னைமீர் - தாய்மார்கள், கரும்பொடு - இக்ஷுக்களோடேகூட, செந்நெல் - சிவந்த நெல்லுக்கள், ஸர்வகாலமிருப்பாலே ஸம்ருத்தங்களாயிருக்கிற வ்ரீஹிகளென்றபடி. ஓங்கு - செழிப்பாலே உன்னதங்களான, கரும்புகளுக்கும் செந்நெல்களுக்கும் நிழலைச்செய்யும்படி உன்னதங்களான, செந்தாமரை - சிவந்த தாமரைகள், நோக்கும்பக்கமெல்லாம் - பார்த்தவிடமெல்லாம், பக்கம் - பார்ச்வம், உபயபார்ச்வங்களிலுமென்றபடி. வாய்க்கும் - வாயாநிற்கிற, ஸம்ருத்தங்களாகாநிற்கிற வென்றபடி. தண் - சீதளமான, பொருநல் - தாம்ரபர்ணியினுடைய, வடகரை - உத்தரதீரத்தில், வண் - உதாரமான, ஸகலஸம்பத்ஸம்ருத்தமான வென்றபடி. தொலைவில்லிமங்கலம் - தொலைவில்லிமங்கலமென்கிற திவ்யநகரத்தை, வண்தொலைவில்லி யென்கிறவிடத்தில் - ஸம்ஹாரத்தில் தகாரலோபம் ஆர்ஷம். நோக்குமேல் - நோக்கினதுக்குமேலே, அவ்வூரைக்கண்டபின்பு என்றபடி. இவள் - இந்தப்பெண்ணானவள், அத்திசையல்லால் - அந்ததிக்கை ஒழிய, மற்று - மற்றொன்றையும், நோக்கிலள் - பார்க்குறாளில்லை, வைகல்தொறும் - கழிகிறநாள்தோறும், வைகுகை - கழிகை, நாள்தோறுமென்கிறவிடத்தில் ளகாரலோபம் ஆர்ஷம்; ஸர்வகாலமுமென்றபடி. வாய்க்கொள் - வாயிலே கொள்ளுகிற, இவள் தன்வாயாலே சொல்லுகிற வென்றபடி. வாசகமும் - வாசகசப்தமும், மணிவண்ணனாமமே - இந்த்ரநீலமணிவர்ணனானவனுடைய திருநாமமே, மணிபோலேமுடிந்து ஆளலாம்படியானவனுடைய ஸௌலப்யாதிகுணவாசகங்களான திருநாமங்களென்றபடி. * * (சு॥)

மூ— அன்னைமீரணிமாமயிற்சிறுமானிவணம்மைக்கைவலிந்* தென்னவார்த்தையுங்கேட்குறாடொலைவில்லிமங்கலமென்றல்லான்* முன்னநோற்றவிதிகொலோமுகில்வண்ணன்மாயங்கொலோவவன்* சின்னமுந்திருநாமமுமிவள்வாயனகடிருந்தவே* ॥எ॥

ஆ— (அன்னைமீர்) நிரதிசயஸௌந்தர்யஸம்பந்நநீலகேகியையாலே பாலஹரிணீசாபலவிசேஷவயோவஸ்தையா யிருந்த விசசிறுப்பெண்பிள்ளை நம்முடைய விதிநிஷேதாதிஸம்வித்தியாய்க்கொண்டு தொலைவில்லிமங்கலமென்றுஞ்சொல்லல்லது மற்றொருசொல்லுங்கொள்ளாள். வேதங்களும் வேதவித்துக்களான ஸநகாதிகளுமேத்தினாப்போலே விஸதமாயக்ரம ஜ்வயமாம்படி பகவானுடையதிவ்யசிஹ்நங்களையும் ஸௌந்தர்யாதிஸகலகுணங்களையும் அதிஸாரமானசொற்களாலே சொல்லாநின்றாள். இப்படி இவளுக்குத் தேவப்பிரான் திருவடிகளிலுண்டான பக்திவைஶம் ஜந்மாந்தரக்ருத புண்யவிசேஷங்களின் ஸஹாயத்தாலே வந்ததோ? அன்றியே அவனுடைய நிரவதிகஸௌந்தர்யத்தைக்காண்கையாலே வந்ததோ? வென்று விஸ்மயித்து இப்படி பக்திவிசேஷமான விவளைக்குங்கூட விதேயையல்லளென்கிறாள். ॥எ॥

(திருந்து) சுவிஷ்டாத்மகவர்ணக்ரமமான ஸகலவேதங்களாலும் ஸம்ஸ்துத்யமானனைப் பக்ஷஸாரதாயநு

✳ ஏழாம்பாட்டு. ✳

இ— அணிமாமயிலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரதிசயெத்யாதியால்) சிறுமானென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பாலேத்யாதியால்) ஆகிருதியையாலே என்கிறத்தை யுபலக்ஷிதயா யென்றொருபதத்தை யத்யாஹரித்துயோஜிப்பது. நம்மைக்கைவலிந்தென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நம்முடையவித்யாதியால்) என்னவார்த்தையும் கேழ்க்குறுளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மற்றொருவித்யாதியால்) திருந்தவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வேதங்களுமித்யாதியால்) அவன்சின்னமுமென்கிறதையுரைக்கிறார் (அவனுடையவித்யாதியால்) திருநாமமுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸௌந்தர்யேத்யாதியால்) இவள்வாயனகளென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதிஸாரமானவித்யாதியால்) இத்தால் வாய்க்கொள்வாசகமுமென்று கீழ்ச்சொன்னத்தை விவரிக்கிறதிப்பாட்டென்று ஸங்கதிஸூசிதை. த்ருதீயபாதத்தின் ஸங்க்ஷேபதாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியித்யாதியால்) முன்னநோற்றவிதிகொலோவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஜந்மாந்தரேத்யாதியால்) முகில்வண்ணன்மாயங்கொலோவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அன்றியேயித்யாதியால்) பாட்டுக்கும் பாவ தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படிபக்திவிசேஷயித்யாதியால) ॥எ॥

✳ எட்டாம்பாட்டு. ✳

திருந்துவேதமுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சுவிஷ்டாத்மகேத்யாதியால்) வேள்வியுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பக்ஷஸாரதாயநேத்யாதியால்) திருநாமங்களைச்சொன்னது உபலக்ஷண

ஶ— அன்னைமீர் - தாய்மார்காள்? அணி - அழகியதான, மா - நீலகாந்தியையுடைத்தான, மா ஶப்தம் நீலவாசி. மயில - மயூரியாயிருக்கிற, மயூரிபோலேயழகியவளாயிருக்கிறவென்றபடி. சிறுமான் - பாலஹரிணியான, பாலஹரிணிபோலே சாபல்யவயோவஸ்தையான என்றபடி. இவள்நம்மை - அன்னையருநதோழியருமானநம்மை, கைவலிந்து - அதிக்ரமித்து, நமக்குவிதேயையல்லாதவளாயென்றபடி. தொலைவில்லிமங்கலமென்றல்லால் - திருத்தொலைவில்லிமங்கலமென்கிறவார்த்தையொழிய, என்னவார்த்தையும் - வேறொருவார்த்தையையும், கேழ்க்க - கேழ்க்கைக்கு, உறாள் - ஸஹியாள், கிட்டாளென்றபடி. அவன்சின்னமும் - அவனுடைய சிஹ்நங்களும், தவளவொண் சங்குசக்கரமென்று சொல்லப்பட்ட திவ்யாயுதாதி சிஹ்நங்களும், திருநாமமும் - ஸௌந்தர்ய ஸௌலப்யாதி குணவாசகங்களான திருநாமமும், இவள்வாயனகள் - இவள்வாயிலேயுள்ளன, திருந்த - திருந்தும்படி, உஜ்ஜ்வலமாம்படி. சிஹ்நங்களும் திருநாமங்களுமிவள் வாயிலே பட்டபின்பு உஜ்ஜ்வலங்களாயினவென்றுகருத்து. முன்னம்- பூர்வஜந்மத்திலே, நோற்ற- இவளாலே யநுஷ்டிதமான, விதிகொலோ?- ஸுக்ருதமோ, முகில்வண்ணன் மாயங்கொலோ - தேவபிரானுடைய ஸௌந்தர்யமோ, அவனழகைக் கண்டவாஶ்சர்யமோ வென்றபடி. இவளிப்படி சிஹ்நங்களையும் திருநாமங்களையும் மிக்கவழகாகச் சொல்லும்படியான பக்திவைஶம் பூர்வஸுக்ருதத்தால் வந்ததோ? அவன்ஸௌந்தர்யத்தைக்காண்கையால் வந்ததோவென்றபடி.

மூ—திருந்துவேதமும்வேள்வியுந்திருமாமகளிருந்தாமகிழ்* திருந்துவாழ்பொருனல்வடகரைவண்டொலைவில்லிமங்கலம்* கருந்தடங்கண்ணிகைதொழுதவந்நாட்டொடங்கியிந்நாடொறும்* இருந்திருந்தரவிந்தலோசனவென்றென்றேநைந்திரங்குமே* ॥அ॥

இரங்கிநாடொறும்வாய்வெரீஇ யிவள்

ஆ—வேதாநவிஹஸம்ஹிதயோ நாந்தைக நித்யநைமித்திகாதிஸமஸ்தகர்மங்களாலே ஸமாராத்யனுமாய்க்கொண்டு லக்ஷ்மீஸஹிதனான பரமபுருஷன் திருநாட்டிலெழுந்தருளியிருக்கிற இருப்பிற்காட்டில் ஸஹர்ஷனாயெழுந்தருளியிருந்து வாழ்கிற பொருநல்வடகரை வண்டொலைவில்லிமங்கலத்திலே இழைகோள் சோதிச்செந்தாமரைக்கட்பிரானிருந்தமையை அலர்ந்ததொரு நெய்தல்தடாகம்போலேயிருந்த திருக்கண்களாலேகண்டு கைதொழுதவன்றுதொடங்கி இன்றொரு மிருந்திருந்தக்கணைகளையேநினைத்து அரவிந்தலோசந! அரவிந்தலோசந வென்றென்றேசொல்லிநைந்து தளராநிற்குமென்கிறாள். ॥அ॥

(இரங்கி) இவளைத்திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொண்டுபுக்கு அவ்வூர்திருநாமத்தை நீங்கள் கற்பி

இ—மென்கிறார் (லக்ஷ்மீத்யாதியால்) தாமென்றதையுரைக்கிறார் (பரமபுருஷனென்று) மகிழ்ந்துஎன்கிற தற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருநாட்டிலேயித்யாதியால்) தொலைவில்லிமங்கலம்கைதொழுமென்கிற தற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தொலைவில்லிமங்கலத்திலேயித்யாதியால்) கருந்தடங்கண்ணியென்கிறத ற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அலர்ந்ததொருவித்யாதியால்) தொழுதவன்றுளித்யாதி - இத்தாலவளைத் தொழுதவன்றுதொடங்கி இன்றளவுமுண்டான விவளுடைய பெருமையத்தைச்சொல்லுகிறாள் என்று ஸமுதியும்ஸூசிதை ॥அ॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

அவ்வூர்திருநாமங்கற்றதற்பின்னையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவளையித்யாதியால்)

ப—திருந்து - திருந்தியிருக்கிற, ஸ்வரவர்ணாதிகள் தப்பா திருக்கிற என்றபடி. வேதமும் - வேதங்களும், வேள்வியும் - யாகங்களும், திருமாமகளிரும் - லக்ஷ்மியாகிற பெரிய பெண்ணும், திரு லக்ஷ்மீ, மா - மஹதீ, ஸ்த்ரீணாமுத்தமா யென்றபடி, மகள் - பெண், மகள் ஶப்தத்துக்கு மகளிரென்று பஹுவசனம் பெரியபிராட்டியாரு மென்றபடி தாம் - தாமும். பரமபுருஷன்தானு மென்றபடி. மகிழ்ந்து. திருநாட்டிலும் ஸஹர்ஷமாயிருந்து ஶாஶ்வதமாக எழுந்தருளியிருந்து, வாழ் - வாழாநிற்கிற, இது அவ்வூருக்கு விஶேஷணம். பொருனல வடகரை - தாம்ரபர்ணிக்கு உத்தரதீரத்தில், விரஜைக்கரை யென்னுமாப்போலே சொன்னபடி. வண் - ஸர்வஸம்ருத்தியான, தொலைவில்லி மங்கலம்- திருத்தொலைவில்லி மங்கலமென்கிற திவ்யநகரத்தை, அவ்வூரிலிருக்கிற செந்தாமரைக்கண்ணனை யென்றபடி. இதுக்கு கைதொழு தென்கிறத்தோடே ஸம்பந்தம். கரும் - கருத்தவையான, "அஸிதேக்ஷணா" வென்கிறபடியே நீலங்களான வென்றபடி. தடங்கண்ணி - தடாகம்போலே களான கண்களையுடையவளான விவள், தடம் - தடாகம். கருங்கண்ணி - கண்ணழகுக்கு அவள் அஸிதேக்ஷணையோடொக்கும். தடங்கண்ணிஎன்று அவளிற் காட்டிலிவளுக்கு வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. அவளை அநுபவிக்கையால் வந்தவழகு அவள்கண்ணுக்கு, அதில் மழகுமுண்டிறே நத்தை யநுபவிக்கையா லிவள் கண்ணுக்கு. கைதொழுத வன்றுதொடங்கி. கண்டுஸேவித்து வந்தன்று தொடங்கி, நாள்தொடங்கியென்கிறவிடத்திலே இன்றொடாறும் - இப்பாலுண்டான நாள்தோறும், இதுக்கு இரங்கு மென்கிறத்தோடே ஸம்பந்தம். இருந்திருந்து - ஆற்றாமையாலே யசித்திருக்கமாட்டாதவள் க்ஷணந்தோறும் பண்ணிப்பண்ணியிருந்தென்றபடி. அரவிந்தலோசன - ஸம்போதனம். என்றென்றே- ஒருக்கால்சொல்லி நிற்கமாட்டாமையாலே பலகாலுமிப்படியே சொல்லியழைத்து, நைந்து - ஶிதிலமாய், இரங்கும் - நெஞ்சுருகநின்றாள், இரங்குகை - நெஞ்சுருகுகை ॥அ॥

இவள் - இப்பெண்பிள்ளையானவள், அவ்வூர் - அந்தவூரினுடைய, திருத்தொலைவில்லி மங்கலத்தினுடைய வென்றபடி. திருநாமம் - திருநாமத்தை, கற்றதற்பின்னை - சொல்லக்கற்றபின்பு, இரங்கி - நெஞ்சுருகி, நாடொறும் - நாள்தோறும், வாய்வெரீஇ - வாய்வெருவி, அவன் நாமங்களை பரவஶமாகச் சொல்லியென்றபடி,

மூ—கண்ணநீர்களலமர* மரங்களுமிரங்கும்வகைமணிவண்ணவோவென்றுகூவுமால்* துரங்கம்வாய்பிளந்தானுறைதொலைவில்லிமங்கலமென்றுதன்* கரங்கள்கூப்பித்தொழுமவ்வூர்திருநாமங்கற்றதற்பின்னையே* கூ॥
பின்னைகொல்நிலமாமகள்கொல்திருமகள்கொல்பிறந்திட்டாள்* என்னமாயங்கொலோ இவள்நெடுமாலென்

ஆ—க்கக்கற்றதற்பின் விஶ்லேஷஸந்தாபத்தாலே ஏகதேஶமல்லாதபடி ஸர்வாங்கங்களிலும் திருநாமத்தையே வாய்வெருவி அசேதநமான மரங்களுங்கூட இரங்கும்படி ஶோகித்து மணிவண்ணவோவென்று கூப்பிட்டழைத்துத் துரங்கம்வாய்பிளந்தான் தன் து:க்கமெல்லாம்போம்படி யெழுந்தருளியிருந்த தொலைவில்லிமங்கலமென்றுசொல்லித் தன்கைகளைக்கூப்பித்தொழாநிற்கும். ஆதலால் அவ்வூரில்கொண்டுபுக்கு அவ்வூர்திருநாமத்தைக்கற்பித்துக்கெடுத்திகோளென்கிறாள். ॥கூ॥

(பின்னைகொல்) நீங்களிவளை திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொண்டுபுக்கவன்றுதுடங்கி அவனுடைய பிரவயிகமான ஆஶ்ரிதவாத்ஸல்யாதிகுணங்களையே சொல்லிக்கூப்பிட்டுத் தன்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காகத் தானவதாரம்பண்ணுவதற்குமுன்னே எம்பெருமான் பலவடிவுகளைக்கொண்டு நின்றிருந்துறைகின்ற திருத்தொலைவில்லிமங்கலத்தைச் சென்னியால்வணங்கி அவ்வூர்திருநாமத்தையென்றே கேட்பதென்று சிந்தியாநிற்கும். இப்படி எம்பெருமான்பக்கலுண்டான பக்திவெள்ளத்திலே யழுந்திக்கிடக்கிற இவள் நப்பின்னை

இ—இரங்கியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (விஶ்லேஷேத்யாதியால்) வாய்வெரீஇ என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவன்திருநாமத்தையேயித்யாதியால்) துரங்கம்வாய்பிளந்தானுறை என்கிறதற்கு அபிப்ராயமருளிச்செய்கிறார் (அந்த து:க்கமெல்லாமித்யாதியால்) பாட்டுக்குப் பரமதாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆதலாலித்யாதியால்) ॥கூ॥

## *பத்தாம்பாட்டு.*

நெடுமாலென்றேநின்றுகூவும் என்கிறவிடத்தில் அபிப்ராயமருளிச்செய்கிறார் (நீங்களித்யாதியால்) நெடுமாலென்றேநின்றுகூவுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுடையபிரவயிகேத்யாதியால்) கூப்பிட்டுஎன்கிறதற்கு வணங்கியென்கிறதோடே அந்வயம். முன்னிவந்து என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்னோடித்யாதியால்) தன்னோடுஎன்றது - இப்பிராட்டியோடேஎன்றபடி. ஏற்கஎன்றது - அநுகுணமாகவென்றபடி. தானவதாரம்பண்ணுவதற்குஎன்றது - பிராட்டி அவதாரம்பண்ணுவதற்கு என்றபடி. நின்றிருந்துறையுமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பலவடிவுகளையித்யாதியால்) அவ்வூர்திருநாமங்கேட்பது சிந்தையேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவ்வூரித்யாதியால்) ப்ரஶ்நவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியெம்பெருமான்பக்கலித்யாதியால்) பின்னைகொல் நிலமாமகள்சொல்

ப—கண்ணநீர்கள் - நேத்ரஜலங்கள், அலமர - ப்ரவாஹங்களாய் ப்ரவஹியாநிற்க, மரங்களும் - அசேதநங்களான வ்ருக்ஷங்களுங்கூட, இரங்குமவகை - இரங்கும்படி தன்னுடைய த்வநியைக்கேட்டு உருகிப்போம்படியென்கை, ஓமணிவண்ணா? என்று மாறியழைப்பது - ஓ! என்று ஆஶ்சர்யவிஶேஷம். மணிவண்ண - நீலமணிஸத்ருஶ, வண்ணம் - ஸத்ருஶம். மணிபோலே முடிந்தாளலாம்படி ஸுலபனாய் ரமணீயனுமாயிருக்கிறவனே என்றபடி. ஸம்போதி. என்றுகூவும் - இப்படிகூப்பிடாநிற்கிறாள், ஆல் - விஷாதே. துரங்கம் - அஶ்வரூபியான கேஶியை, வாய்பிளந்தான் - வாயைப்பிளந்தவனான க்ருஷ்ணன், உறை - வஸியாநிற்கிற, தொலைவில்லி மங்கலமென்று - திருத்தொலைவில்லிமங்கலமென்று சொல்லி, தன் கரங்கள் - தன்னுடைய ஹஸ்தங்களை, கூப்பி, - அஞ்ஜலியாகப்பண்ணி, தொழும் - ஸேவியாநின்றாள். * * * * * ॥கூ॥

இவள் - தொலைவில்லிமங்கலத்தை நீங்கள்காட்டக்கண்டநுபவித்தவிவள், நெடுமாலென்றே - ஆஶ்ரித விஷயத்தில் தீவ்ரவ்யாமோஹத்தை உடையவனேஎன்றே, மால் - வ்யாமோஹம், நின்று - ஸ்தாயியாய், நிரந்தரமாயென்றபடி. கூவும - கூப்பிடாநிற்கிறாள், ஆல் - ஆஶ்சர்யத்யோதகாவ்யயம், முன்னிவந்து - இவளைத் தனக்கு ஸம்ஶ்லேஷிக்கைக்காக இவள்பிறப்பதற்குமுன்னேவந்து, அவன் - அந்தஸர்வேஶ்வரனானவன், நின்றிருந்துறையும் - அநேகரூபங்களை பரிக்ரஹித்து நின்றிருந்தும்வஸியாநிற்கிற, தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலமென்கிற திவ்யநகரத்தை, சென்னியால் - ஶிரஸ்ஸாலே, சென்னி - ஶிரஸ்ஸு, வணங்கும் - ஸேவியாநிற்கிறாள், அவ்வூர்திருநாமம் - அந்தவூர்திருநாமத்தை, கேட்பது - பிறர்சொல்லக்கேட்பதை,

மூ—றேநின்றுகூவுமால்* முன்னிவந்தவனின்றிருந்துறையுந்தொலைவில்லிமங்கலஞ்*சென்னியால்வணங்குமவ்
ஊர்திருநாமங்கேட்பதுசிந்தையே* ।௰॥
சிந்தையாலுஞ்சொல்லாலுஞ்செய்கையினாலுந்தேவபிரானையே* தந்தைதாயென்றடைந்தவண்குருகூரவர்
சடகோபன்* முந்தை

---

ஆ— ப்பிராட்டியோ! ஸ்ரீப்பிராட்டியோ! பெரியபிராட்டியோ! அன்று, இவள் தானென்றுசொல்லலாய்த்தலை
ஸாவலியமான வைராக்யபங்கண்டுமறியோம், இதென்னஸ்வரூபமென்று விஸ்மிதையாய்க்கொண்டு இ
ப்படியதிநிர்ப்பந்தமான விவளை என்னாலும் நிவர்த்திப்பிக்க முடியாதென்றுசொல்லி முடிக்கிறாள். ।௰॥
(சிந்தையாலும்) வாங்மனஃகாயவ்ருத்திகளாலே தேவபிரானையே தந்தைதாயென்று அடைந்த குருகூர்

---

இ— திருமகள்கொல் என்றிவளவளேசொல்லவமைந்திருக்கையாலேபிறந்திட்டாளென்கிறவிடம்சயிக்கமா
கையாலதுக்குத் தனியே தாத்பர்யமருளிச்செய்கிறார் (அன்றிவள் தானிகாதியால்) அவர்களுக்கு மிவள்படி
யல்லாமையாலே யிவளவர்களிலேயொருத்தியுமன்று; லோகமெல்லாம்வாழுகைக்கிவள்தா னிப்படியொருத்தி
பிறந்தாளென்று சொல்லலாமென்றபடி. சுவதரித்தாளென்றுசொல்லாதே பிறந்திட்டாளென்றுசொன்ன வடி
வாரஸ்யத்தாலு, மிப்பதத்திற்கிப்படியே தாத்பர்யங்கொள்ளுகை யுசிதமென்றுகருத்து. என்னமாயங்கொ
லோவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாவலியமிகாதியால்) பாட்டுக்குப் பூர்வதாத்பர்யம
ருளிச்செய்கிறார் (இப்படியதிநிர்ப்பந்தயிகாதியால்) இவளுக்கிவ்வளவேயைசனல்லா மூங்களாலேவர்த்தித
ஞ்கிற வதைத்தைக கீழ்ப்பாட்டிலே யுபஸம்ஹரித்து இனியென்னாலிவளை நிவர்த்திப்பிக்கமுடியாதென்று
பஸம்ஹரிக்கிற விப்பாட்டிலென்று, இவ்விரண்டுபாட்டுக்களுக்கும் ஸங்கதிகண்டுகொள்வது. ।௰।

---

ப—சிந்தை - ஹ்ருதயம், இவளுக்கிதிவிசேஷஃ. தான்சொல்லுகிறதிருக்கப் பிறர்சொல்லக்கேட்கவேணுமென்
று ஆசைப்படுகிறாளென்றபடி. தோழி தன்வாயில் திருத்தொலைவில்லிமங்கலமென்றால் இப்பிராட்டி சொல்லும்
போதுள்ள ரஸ்யம்பிறவாமையாலே ஊர்திருநாமத்தைச்சொல்லாதே யவ்வூரென்றுசொல்லுகிறாள். ஆனா
லு மொருகால் சொன்னாளேயென்னில்? அது ரஸ்ய ஸ்ம்ருதமாயிருக்கையாலே இத்தைப்பொருந்த
விருக்கிறாள். பின்னைகொல் - பின்னையோ, இவள் நீளைப்பிராட்டியோ! என்றபடி. நிலமாமகள்கொல் - ப்ருதி
விக் கதிஷ்டாத்ரியாய் க்ஷமாகுணங்களாலே ப்ரஸித்தியான ஸ்ரீப்பிராட்டியோ, நிலம் - ப்ருதிவீ. திருமகள் கொல்-
பெரியபிராட்டியோ, பிறந்திட்டாள் - பிறந்தாள், இட்டாளென்றுஸாகல்யநாசம்யோதம் அவர்களிலேயொ
ருத்தியுமன்று? லோகமெல்லாம்வாழுகைக்கிவளொருத்தி பிறந்தாளென்றபடி. என்னமாயங்கொலோ - என்ன ஆச
்சர்யமோ, எம்பெருமான்பக்கல் ஸாவலியமானவைராக்யமென்ன ஆச்சர்யமோ வென்றபடி. * ।௰।

சிந்தையாலும் - மனஸ்ஸாலும், சிந்தை - மனஸ்ஸு, சொல்லாலும் - வாக்காலும், செய்கையினாலும் - கா
யிகவ்யாபாரங்களாலும், இதுக்கு அடைந்தவென்கிறத்தோடே அந்வயம். தேவபிரானையே - தொலைவில்லிமங்கல
த்திலிருக்கிற தேவப்பிரானையே. தந்தைதாயென்று - பிதாவும் மாதாவுமென்று. அடைந்த - அடைந்தவரான,
இது ஆழ்வாருக்குவிசேஷணம். இத்தாலிப்பிராட்டி தன்தாய்மார்முதலான பந்துக்களைவிட்டுத்தேவப்பிரானை
யே ஸர்வவிதபந்துவாகப் பற்றினாளென்று சொல்லுகிற வித்திருவாய்மொழிக்கு ஸாரஸ்யத்தை ஆழ்வார்
தாமே வெளியிட்டாராய்த்து; இரங்குநாடோறுமென்று மனஸ்ஸாக்கவன் பக்கல் ப்ராவண்யமும், மணிவண்ணா
வோவென்று கூவுமாலென்று வாக்ப்ராவண்யமும், கரங்கள்கூப்பித்தொழுமென்று காயப்ராவண்யமுமொருபாட்
டிலேயுபஸம்ஹரித்துச்சொல்லிற்றிறே, வண்-வீ லக்ஷணரான, ஆழ்வார் அவனையேஸகலவிதபந்துவுமாகப்பற்றி
னாப்போலே, ,,அன்னையாயத்தனாய்', 'மாதாபிதா ப்ராதா நிவாஸஃஸரணம் ஸுஹ்ருத்கதிர் நாராயணஃ'' என்கிறபடியே யா
ழ்வாரையே ஸகலவிதபந்துவுமாய்ப்பற்றியிருக்கிறவர்களானவென்றபடி. குருகூரவர் சடகோபன் - திருக்கு
ருகூரிலிருக்கிறவர்களுடைய சடகோபன், ஊரிலிருக்கிறவர்கள் - ஊரவர். அவர்களுக்கு ஸகலவிதபந்துவான
ஆழ்வாரென்றபடி. 'இதுக்குச்சொன்னவென்கிறத்தோடே அந்வயம் முந்தை - அநாதியான, அநாதியாயிருக்கிற வே
தத்தினர்த்தத்தைச் சொல்லுகிறதானவென்றபடி. ,,வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தஶரதாத்மஜே வேதஃ
ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத்ராமாயணாத்மநா'' என்னுமாப்போலே தசரதாத்மஜனாய் வந்துபிறந்தருளுகிற
ஸர்வேஶ்வரனுக்கநாதியான வேதமும் தமிழாயவர்பக்கல் பிறந்ததாகையாலே முந்தையாயிரமென்கிறது.

மூ—கறங்கியசக்கரக் கையவனுக்கென்* பிறங்கிருங்கூந்தலிழந்ததுபீடே* ॥௩॥

பீடுடைநான்முகனைப்படைத்தானுக்கு* மாடுடைவையமளந்தமணாளற்கு* நாடுடைமன்னர்க்குத்தூது செய்நம்பிக்கென்* பாடுடையல்குலிழந்ததுபண்பே* ॥௪॥

---

ஆ—யிருந்த நிறத்துக்கும் ப்ரணதவிரோதி நிரஸநங்களிலே எப்போதும் ஸஜ்ஜமான திருவாழியையேந்தின திருக்கையழகுக்கும்தோற்று நீலரத்நங்களினுடைய ஒளிகள்திரண்டாப்போலே விளங்குகிற திருக்குழலையுடையளான என்பெண்பிள்ளை தன் பெருமையிழந்தாளென்கிறாள். ॥௩॥

(பீடுடை) நிகிலஜகஜ்ஜாதவைலக்ஷண்யாவஹ ஸ்வாபாவிக காரணகலேவரா த்யவகாரண நிர்ணாயக ஜ்ஞாநஸம்கோசவிஹீந ஸ்ருஷ்டிமஹதைச்வர்ய ப்ரஹ்மஸ்த்துக்கும் மஹாவதாநவிஶேஷன்றிக்கே ஸர்வாத்மாக்களும் தன்திருவடிகளை ஸ்பர்ஶித்து நின்றநின்றவிடங்களிலே கண்டு பற்றாம்படி இந்தலோகத்தை அளந்தருளின ஸௌஶீல்யகுணத்துக்கும் ஸர்வப்ரகாரஸஹாஶ்ரிதரான பாண்டவர்கள் ஸர்வமௌதரம்படி அவர்களுக்குதூத்யம்பண்ணி அதுவேதனக்கேற்றமாயிருக்கிற ஆஶ்ரிதவாத்ஸல்யத்துக்கும்தோற்று என்பாடுடையல்குல் தன் சீர்மையையிழந்தாளென்கிறாள். ॥௪॥

---

இ—(ப்ரணதேத்யாதியால்) பிறங்கிருங்கூந்தலென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீலரத்நங்களினுடையவித்யாதியால்) ॥௩॥

✳ நாலாம்பாட்டு. ✳

பீடுடையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிகிலேத்யாதியால்) நான்முகனைப்படைத்தானுக்கு என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வகாரணேத்யாதியால்) மாடுடையென்கிறவிஶேஷணத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (மஹாவதீத்யாதியால்) வையமளந்தமணாளர்க்குஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இந்தலோகத்தையித்யாதியால்) நாடுடையென்கிறவிஶேஷணத்துக்கு அபிப்ராயமருளிச்செய்கிறார் (ஸர்வப்ரகாரேத்யாதியால்) தூதுசெய் நம்பி என்கிற ஸமபிவ்யாஹாரத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அதுவேதனக்கித்யாதியால்) சீர்மை — நல்லஸ்வபாவம், ஸௌஶீல்யாதிகுணங்களென்றபடி. ॥௪॥

---

ஶ்ரு— வடிவழகாயிறதுவத்திலும் நீலவர்ணனென்றபடி. கறங்கிய — ஆஶ்ரிதவிரோதி நிரஸநத்வரையாலே எப்பொழுதுஞ் சுழலாநின்ற, கறங்குகை — சுழலுகை. சக்கரக்கையவனுக்கு — சக்ரத்தைக் கையிலே யுடையவனான ஸ்வாமிக்கு, இதுக்கு இழந்தது என்கிறத்தோடே அந்வயம். என் — என்னுடையவளான, பிறங்கிரும் — அதிதீவர்ங்களுமாய் பஹுளங்களுமான, பிறங்குதல் — நீட்சி, இருமை — விஸ்தாரம். இங்கு பஹுளத்வத்தைச் சொல்லுகிறது. கூந்தல் — கேஶங்களையுடையவளான பெண்ணானவள், இழந்தது — போக்கினது. பீடு — பெருமை, ஜ்ஞாநவாதாபர்யாதிகளாலுண்டான வைலக்ஷண்யமென்றபடி. அவனைக்காணாத வ்யஸநத்தாலே தன்னுடைய பெருமையை யிழந்தாளென்றபடி. * * ॥௩॥

பீடுடை — ஸ்ருஷ்டிநாமரூப ஜ்ஞாநஶக்த்யாதி ஶாஸ்த்ரத்தையுடையவனான, பீடு — ஶாஸ்த்ரம். நான்முகனை — ஸ்ரஷ்டம். படைத்தானுக்கு — ஸ்ருஷ்டித்தவனான, மாடுடை — இடமுடைத்தான, மாடு — இடம். மஹாவதமான விஸ்தாரமற ஸர்வருக்கும் வஸிக்கும்படி பஹுதேஶங்களையுடைத்தானவென்றபடி, வையம் — பூமியை, அளந்த — த்ரிவிக்ரமனாய் அளந்தவனான, மணாளற்கு — த்ரிவிக்ரமனாய் எல்லாரையும் தன்திருவடியாலே ஸம்ஸ்பர்ஶித்த ஸௌஶீல்யத்தைக்காட்டி இவளை வஶீகரித்திவளுக்கு நாயகனான, மணாளன் — நாயகன். நாடுடை — நாட்டையுடையவரான, நாட்டுக்கெல்லாம் உடையவர்களாகைக்கு ப்ராப்தரானவென்றபடி, மன்னர்க்கு — ராஜாக்களுக்கு, மன்னர் — ராஜாக்கள். பாண்டவர்களுக்கென்றபடி. தூதுசெய்ய — தூத்யம்பண்ணினவனான, நம்பிக்கு — பூர்ணனானவனுக்கு, ''அபிஷிக்தவ்யாகாயம்'' இத்யாதிகள்படியே அந்த தூத்யகரணத்தாலே பூர்த்தனாயிருக்கிற க்ருஷ்ணனுக்கென்றபடி. இதுக்கு இழந்தது என்கிறதோடே அந்வயம். என் — என்னுடையவளான, பாடுடை — விஸ்தாரத்தை யுடைத்தான, பாடு — விஸ்தாரம். அல்குல் — நிதம்பத்தையுடையவளான பெண்ணானவள். அல்குல் — நிதம்பம், இழந்தது — போக்கினது, பண்பு — ஸ்வபாவம். தன்னுடைய நிஸர்க்கஸௌஶீல்யாதிகுணமென்றபடி. அவனை யாசைப்பட்டுப்பெறாத வ்யஸநத்தாலே தன் ஸ்வபாவத்தை யிழந்தாளென்றபடி. * * * * ॥௪॥

மூ— குன்றன்னபூந்தண்முடியற்கு* நற்பலதாமரை நாண்மலர்க்கையற்கென்* விற்புருவக்கொடிதோற்றது மெய்யே* ‖ ௬ ‖

மெய்யமர்பல்கலன்நன்கணிந்தானுக்குப்* பையவரவினணைப்பள்ளியினானுக்குக்* கையொடுகால்செய்ய

ஆ—தழைத்தாப்போலேயிருக்கிற திருத்தோள்களிலழகுக்கும் கற்பகச்சோலையிலே ஒருதாமரைக்காடலர்ந்தாப்போலேயிருந்த திருக்கைகளின் அழகுக்கும் நிரதிசயதேஜோயுக்தமாய் விலக்ஷணமான திருவபிஷேகத்திலழகுக்கும், ஸ்ரீஸாரங்கம்வளைந்தாப்போலேயிருந்த திருப்புருவத்தையுடையளான இவள்தன் திருமேனிதோற்றாளென்கிறாள், ‖ ௬ ‖

(மெய்யமர்) அவனுடைய திருமேனியில் தேஜஸ்ஸாலே பூத்தாப்போலேயிருந்த ஸம்வேத்யமான திருவணிகலன்களாலே யொப்பித்தருளினவழகுக்கும் திருப்பாற்கடலிலே நிரதிசயஸௌகுமார்யமான திருவரவணையிலே கண்வளர்ந்தருளுகிறவழகுக்கும் அந்த திருவணிகலன்களுடைய நிரவதிகமான தேஜஸ்ஸையும் திருவனந்தாழ்வானுடைய பணாமணிகளின் நிரவதிகமான தேஜஸ்ஸையும் விஞ்சிப்புறப்படாநின்ற வொளியையுடைய

இ—த்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கற்பகச்சோலையிலேயித்யாதியால்) அதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரதிசயேத்யாதியால்) விற்புருவக்கொடியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீஸாரங்கமித்யாதியால்) ‖ ௬ ‖

## ✳ ஏழாம்பாட்டு. ✳

மெய்யமரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவனுடையவித்யாதியால்) பல்கலன்நன்கணிந்தானுக்கு என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்வேத்யமித்யாதியால்) ஒப்பித்தருளினவென்றது - அலங்கரித்தருளினவென்றபடி. அதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருப்பாற்கடலிலேயித்யாதியால்) தாமரைநாண்மலர்க்கையர்க்கென்று கீழ்ச்சொன்ன திருக்கையினழகை கையொடுகாலென்று இப்பாட்டிலுஞ்சொல்லுகை ஸாமாந்யமன்றோவென்ன? கீழ்ப்பாட்டிற்காட்டிலும் ஸாதிவாஹாஸ்யம் விவக்ஷிதமாகையாலே ஸாமாந்யமில்லையென்கிறார் (அந்தத்திருவணியித்யாதியால்) கையொடுகாலென்றது உபலக்ஷண

மா—யுடையவர் தோளர். சுடர்ப்பொற்குன்று என்றுமாறி அந்வயிப்பது. சுடர்-அதிதேஜிஷ்டமான, பொற்குன்று-கநகமிரிக்கு, அன்ன - ஸத்ருசமான, அன்ன- ஸத்ருசம். பூம்- தர்சநீயமான, தண்- சீதளமான, திருமுடிக்கு ஸாவஸமானமான வென்றபடி. முடியற்கு- கிரீடத்தை யுடையவரான, முடி-கிரீடம். முடியையுடையவர்-முடியர். நல்- நல்லவையான நீலரத்நிகங்களான ராஜங்களுக்குப் வாஸஸ்தங்களானவென்படி. பல் - பஹூக்களான, இவை கைகளுக்கு விசேஷணங்கள். தாமரை - தாமரையத்தினுடைய, நாள்- அபிநவமான, நாள் - அபிநவம். நாள் மலர்- என்கிறவிடத்தில் ளகாரஸ்ய மகாரேவமர ணகாராதேசம். மலர் - புஷ்பம் போலேயிருக்கிற, கையற்கு - கைகளை யுடையவரானவாக்கு, இதற்குத்தோற்றது என்கிறதோடே அந்வயம். என்- என்னுடையவளான, வில்புருவ - புருவஸமானமாய் போலேயிருக்கிற ப்ருவத்தையுடையவளான, ஆயுதாஸ்த்ரத்தைக்கையில்க்கொண்டுபட்டுக் கிடப்பாரைப்போலே விஜயஸூசகமான வஸிகாரத்தைக்கொண்டுகடீர்! இவள் தோற்றதென்று விஷாதம் இங்கே ஸுசிதம் கொடி - லதாஸாதருச்யத்தைப்போலேயிருக்கிறவள். தோற்றது - இழந்தது, மெய் - தன்னுடைய ஶரீரம், மெய்யென்று ஶரீரம், ஶரீரத்தை இழக்கையாவது ஶரீரம் ஸ்வவசமன்றிக்கே யொழிகை. "ஊர்த்வம் மாஸாந்த ஜீவிஷ்யே" என்னப்பண்ணும் தன்வடிவழகைக்காட்டி "ந ஜீவேயம் க்ஷணமபி" என்னப்பண்ணும் இவளுடைய வடிவைக்கிவர் அபஹரித்தானென்றுகருத்து. ‖ ௬ ‖

மெய் - திருமேனியிலே, அமர் - பொருந்தியிருக்கிற, தத்தவயவங்களுக் கநுரூபங்களாயிருக்கிறவென்றபடி. பல் - பஹுவிதங்களாயிருக்கிற, கலன் - திவ்யாபரணங்களை, கலன் - ஆபரணம். நன்கு - நன்றாக, தர்சநீயமாகவென்றபடி. அணிந்தானுக்கு - சாத்திக்கொண்டிருக்கிறவனான, அணிகை - சாத்துகை, பையரவின் - பணாபரிபான பாமத்தினுடைய, பை பூவம்- பணாபோவி. அரவு - நாமம், ஶாகவார்த்திவைகல்ஸாதைஸ். ஸஹஸ்ரஸமுஜநித நிரவதிகாநந்தத்தாலே விகஸிதபணனான திருவனந்தாழ்வானுடைய. அணை - ஶய்யையிலே, திருவனந்தாழ்வானாகிற ஶய்யையிலே என்றபடி. பள்ளியினானுக்கு - கண்வளர்த்தியையுடையவனான, பள்ளி- கண்வளர்த்தி, பள்ளியை யுடையவன்- பள்ளியினான். கையொடுகால் - திருக்கைகளோடே

மூ— வடிவுடைவானோர் தலைவனேயென்னும்வண்டிரு
வரங்கனேயென்னும்।அடியடையாதாள்போலிவ

ஆ — அயர்வறு மமரர்களையுங்கூடத் தோற்பித்தடிமை யாக்கிக்கொண்டிருக்கிற வுன்னைக் காட்டியருளா யென்னும். கோயிலிலே புகுந்து கண்வளர்ந்தருளி ஆஶ்ரிதருக் காதாரம் பண்ணிக்கொண்டிருக்கிற பரமோதாரனே யென்னும். இனி பெருமாள் திருவடிகளைச் சேர்ந்து முடியமாட்டாள் போய்முடிந்தா ளென்னும்படி அத்யந்தபரவஶையான விவள், ப்ரஸித்தமானவிந்த விஶ்லேஷதிவஸமான நிரவதிகது:கமெல்லாம் விஸ்மிதமாம்படி தானாசைப்பட்டபடியே

இ— வடிவுடைவானோர் தலைவனேயென்னுமென்கிறதற்குத் தாத்பர்ய (அயர்வறு மித்யாதியால்) வண்டிருவரங்கனே யென்னு மென்கிறதற்குத் தாத்பர்ய (கோயிலிலே யித்யாதியால்) அடியடையாதாள் போலிவ ளென்கிறதற்குத் தாத்பர்ய (பெருமாள்திருவடிகளையித்யாதியால்) சேர்ந்து முடியவென்றது சேர்ந்து தலைக்கட்ட என்றபடி. போய்முடிந்தாளென்றது மிகவுமஶக்தையானா ளென்றபடி. அதிபரவஶையானாளென்று கருத்து. அணுகி யித்யாதிக்குத் தாத்பர்ய (ப்ரஸித்தமான வித்யாதிகளால்) இத்தால் ஸர்வேஶ்வரனிவளுடைய வார்த்தியை யறிந்து தன் ஶீலாதிஶயத்தாலும் ஔதார்யத்தாலு மிவளுடைய வ்யாஸங்ஸம்ஶ்லேஷத்தை விஶேஷித்து ப்ரகாஶிப்பிக்க, இவளுக்கதனால் பிறந்தவாஶ்வாஸத்தைக்கண்டுதாயார் ஸஹர்ஷையாய்ச்சொல்லுகிறாளென்று ஸங்கதிஸங்க்ரஹம். * * * * * * * *

இ—ஶ— நிற்கிறாள். கடவுள்-தைவம், பரதேவதைக்கதாபர்ஸம்ஸாத்தனேஎன்றுசொல்லா நிற்கிறாளென்றபடி. ப்ரயோஜநாந்தரபரரானப்ரஹ்மாதிதேவர்களோடுள்ளவுறவுக்கதைகஜீவிதையான என்னோடுனக் கிலையோ வென்று ஸாக்ஷதாக்ஷேபம். வடிவுடை - திவ்யரூபத்தை யுடையவர்களான, ஸமஸ்த கல்யாண குணமெல்லாம் வடிவிலே தோற்றும்படி யுஜ்வலரூப ஶாலிகளான என்றபடி. வானோர் - நித்யஸூரிகளுக்கு, தலைவனேயென்னும் - ப்ரதானனேஎன்னாநிற்கிறாள் உன்னழகாலேயவர்களைத் தோற்பித்தடிமை யாக்கிக்கொண்டு அவர்களுக்கு ஶேஷியாயிருக்கிறவனே என்று சொல்லாநிற்கிறா ளென்றபடி. அவர்களுக்கு நீயுன்னைக் கொடுத்துக்கொண்டிருக்குமாப்போலேஎனக்கு முன்னைக்காட்டியருளாயென்கிறாள் என்று தாத்பர்யம். வண் - உதாரமான, திருவரங்கத்தாயென்னும் - ஶ்ரீரங்கத்திலேயிருக்கிறவனேஎன்னாநிற்கும். நித்யஸூரிகள் மாத்ரமநுபவிக்கிறதாய்ப் போகாதே ஸம்ஸாரிகளு மநுபவிக்கும்படி கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிற பரமோதாரனே என்கிறாளென்று ஸாபிப்ராயம். நீ கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற ஸேவைநான் பெறவேண்டாவோ என்கிறாளென்று பரமதாத்பர்யம். அடி - அவன்திருவடிகளை, அடையாதாள்போல் - அடையாதவள்போலே இருந்தவளான, இந்த விரஹத்தாலே யிவள் முடிந்து போமித்தனையொழிய இனியவன்திருவடிகளை யடையமாட்டா ளென்னும்படி இருந்தவளான என்றபடி. இவள் - இப்பெண்பிள்ளையானவள்,

ஒ— வடிவுடை வானோர் தலைவனே என்னும் - திவ்யவிக்ரஹமங்களநித்யஸூரிநிவஹஸேவித இதி, தைவம் ராஜ்யம் பரதேவவாதி ஶப்தயோஸ்த்ஸ்வயம் ஸ்திதயா நிவஹஸ: ஸாக்ஷாத் ஸம்பந்தித: என்னும் வடிவுடைவானோர் தலைவ னித்ய என்னும்- ஐஶ்வர்யவதீதி நாஸ்யஷ்: ஸ்வதேஶ ஸ்வாத்ம்யம்: ஐஶ்வர்ய ப்ரபுத்வம் ப்ரஸித்தவிக்ரஹவிஶிஷ்டதைவகாரணஸஞ்சிதத்வாத்யஷ்: இதி யாதநாவாயம் நிவஹஸ:. வண் திருஅரங்கனேஎன்னும்-ஸதீவீநஶ்ரீரங்கவாஸிந்நிதி, அடையாதாள் போல் - ஸ்வதார ஸாஸ்யணா ஹிதேவஸிதா ஐயம்,

ப— வானவனே என்னாநின்றாள் (வடிவுடை)ஸமஸ்தகல்யாணத்தால்வந்தஸௌந்தர்யம்வடிவிலேதோற்றும்படியிருக்கிற ஸூரிகளுக்குத தலைவனே என்னாநின்றாள் (வண்) நித்யஸூரிகளே யநுபவித்துப் போகையன்றிக்கே ஸம்ஸாரிகளு மிழவாமைக்கன்றோ இங்குவந்து கண்வளர்ந்தருளுகிறது. இங்குச்சாய்ந்தருளின தின் ஸேவைநான் பெறவேண்டாவோ வென்னாநின்றாள். வண்மை - ஆசைப்பட்டார்க்கு தன்னைக் கொடுக்கு மௌதார்யம். (அடியடையாதாளித்யாதி) திருவடிகளைக் கிட்டயாட்டாள்போலே யிருந்து இவள்க்ருத்தாலே

மூ— முகில்வண்ண னடிமேற்சொன்ன சொல்மாலை யாயிரத்திப் பத்தும்வல்லார் |
முகில்வண்ணவானத் திமையவர்சூழ விருப்பர் பேரின்ப வெள்ளத்தே ॥கக॥

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஆ— முகில்வண்ண னடிமேற்சொன்னசொல்மாலையாயிரத் திப்பத்தும் வல்லார், பெரிய பெருமாள் திருமேனியில் நீலமான ஜ்யோதிஸ்ஸின் வெள்ளத்தாலே நீலவர்ணமான திருநாட்டிலேயயர்வறுமமரர்கள்சூழ ஸகலஸம்ருத்திக பரமபதப்ராப்தாநந்தஜநித நிரவதிகாநந்த ஸந்தோஹாரணவாந்தர்நிமக்நரா யிருப்பரென்கிறார். கக

## திருக்குருகைப் பிரான்பிள்ளான் திருவடிகளேசரணம்.

இ— முகில்வண்ண வானத்து என்கிறதற்குத் தாத்பர்யம் (பெரியபெருமாளின் த்யாதியால்) இமையவர்சூழ என்கிறதற்குத் தாத்பர்யம் (அயர்வறு மித்யாதியால்) பேரின்ப வெள்ளத்தே என்கிறதற்குத் தாத்பர்யம் (ஸகல ஸம்ருத்திகேத்யாதியால்) * * * * * * * * * * *

இ—ஸ— முகில்வண்ண னடிமேற்சொன்ன- நீலவர்ணன்விஷயமாகவருளிச்செய்ததான,சொல்மாலையாயிரத்து - ஸூக்திரூபஸஹஸ்ரத்தில், இப்பத்தும் - இந்த பத்து பாட்டுகளையும், வல்லார்-அப்யஸிக்கவல்லார்கள், முகிலவண்ண - நீலவர்ணமான, பெரியபெருமாளுடைய திருமேனியி லத்யுஜ்ஜ்வலகாந்திப்ரவாஹங்களாலே நீலவர்ணமான என்றபடி. வானத்து - பரமவ்யோமத்திலே, இமையவர் - தேவர்கள், நித்யஸூரிக ளென்றபடி சூழ - இவர்கள்பக்கலாதராதிசயத்தாலேசூழ்ந்துகொண் டிருக்க, பேரின்ப வெள்ளத்தே - மஹாநந்த ப்ரவாஹத்திலே, இன்பம் - ஆநந்தம், பரிபூர்ணஸமஸ்தாநந்தத்திலேஎன்றபடி. இருப்பர்- நித்யமாக ப்ரதிஷ்டிதராவர்கள். கக

ஜ்ஞாநவைராக்ய ப்ரஷ்டாநலேவயி ஸ்ரீமதேதாந்த ராமாநுஜ மஹாதேசிகாய நம:.

ஞ— முகில் வண்ணன் அடிமேல்சொன்ன சொல்மாலை ஆயிரத்துள் - நீலமேகவர்ண ஸமஸ்தகாரணாரவிந்த விஷயே ப்ரணீதே ஸூக்திரூபமாயாஸஹஸ்ரே, இப்பத்தும்வல்லார் - ஏதத்தசகஸ்யாப்யேதார:, முகில் வண்ண வானத்து - நீல மேகவர்ண ஸமஸ்தாவாஸபூத பரமாகாஸே, பேர்இன்ப வெள்ளத்து - மஹாநந்த ஸாகரே,இமையவர்சூழ இருப்பர் - ஸ்பஷ்டம். கக

ஸ்ரீமதே ஸ்ரீரங்கராமாநுஜ மஹாதேசிகாய நம:.

ப— (முகிலித்யாதி) முகில் வண்ணனை பெரிய பெருமாள் அடிமேற்சொன்ன வாயிரத்துளிப்பத்தும் வல்லார் முகில்வண்ணனுப் பரமபதத்துள்ளவனுடைய நிழலீட்டாலே அவன்படியாயிருக்கிற பரமபதத்திலே நித்யஸூரிகள்திரளவிருக்க அவர்கள்நடுவேயாநந்தநிமக்நராயிருந்தநுபவிக்கப்பெறுமவர்கள். கக

ஸ்ரீமூலகோபயதிராஜ காரகேஸரிமஹாந மஹாதேசிகேப்யோ நம:.

ஸ்ரீமதே ஸ்ரீவராஹாய ஸம்யமீந்த்ர மஹா தேசிகாய நம:.

———)(———(***)———)(———

ஸ்ரீ:

த்ராவிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளி:

(o)

# (கங்குலும் பகலும்.)

ஸ்ரீரங்கேஶயநீயாந் நிகிலஜநநஸ்ருஷ்டாத்ரேர் ஶாகிநா
விஸ்தாரிஷுஸாவா உரஶய்ய நதஃ பாண்டவார்த்தநாதவம் !
ஶர்மஶர்மப்ரதாநாந் ஜலதநிபதநோர் வக்த்ரயாத்ரார்ஹகாந்
ஸாதீஸாநாம் விமஹர்த்தா ஶேவஶய்ய திவ்ய த்வாஹஸிதோ ஶௌரி:॥

(ஸ்ரீரங்கேஶயநீயாநாந்) செங்கயல்பாய் நீர்திருவரங்கத்தாய் - தியக்குகளுக்குங்கூடக் களித்தநுவதிக்கும்படி ஸ்ரமஹரமான ஜலஸம்ருத்தியையுடைய ஸ்ரீரங்கத்திலே யெழுந்தருளி யிருக்கையாலும், (நிகிலஜநநஸ்ருஷ்டாத்ரேர்:) முன்செய்திவ்வுலக முண்டுமிழ்ந்தளந்தாய் - எல்லாலோகங்களையும் ஸ்ருஷ்டிக்கையாலும், ஸ்ருஷ்டிஸமயத்தாலே கடாக்ஷமாயையிலே “காகுத்தா கண்ணனேயென்னும்” என்று சொல்லுகிற அவதீர்யாக்ஷகங்களும் ஸம்க்ருஹிக்கப்படுகிறது. (ஶாகிநா) சிட்டனே - வஶிஷ்டனுகையாலும், (விஸ்தாரிஷுஸாவாந்) அந்திப்போ தவுணனுட லிடந்தானே - விரோதியான ஹிரண்யனை ஸம்ஹரிக்கையாலும், (உரஶய்ய நத:) பைகொள் பாம்பணையாய் - தன்திருமேனி ஸ்பர்ஶத்தா லுண்டான ஹர்ஷத்தாலே விகஸிதமான பணங்களையுடைய திருவனந்தாழ்வானை திருப்படுக்கையாகவுடைய னுகையாலும், (பாண்டவார்த்தநாதவம் ஶர்மஶர்ம ப்ரதாநாந்) பாலதுன்பங்க ளின்பங்கள் படைத்தாய், வேதநருடைய கர்மாநுரூபமாக ஸுகது:கங்களைக்கொடுக்கு மவனுகையாலும், (ஜலதநிபதநயா உவக்த்ரயாத்ராரக்ஷாந்) இங்கே க்ரமம் விவக்ஷிதமன்று. குன்றேந்திக் கோநிரை காத்தவனென்னும்- நின் திருவெயிற்றுவிதாத்ரி. முகில்வண்ணனடியை - கோவர்த்தநத்தை எடுத்து கோகோபாலர்க் குபகரிக்கையாலும், வராஹ ரூபத்தைக்கொண்டு பூமிக்குபகரிக்கையாலும், வர்ஷுக வலாஹகம்போலே ஸ்யாமமாய்க் குளிர்ந்திருக்கிற வடிவையுடையனுகையாலும், எல்லார்க்கும் ஸ்வாமியான ஸ்ரீரங்கநாயகஸ்வாமிகளுடைய மஹத்வத்தை ஸதிப்பியா நிற்கிறனென்று “கங்குலும்பகலும்” என்கிற தஶகத்திலே காரி மாறன் அருளிச்செய்தா னென்கிறர். * * * * * * * * *

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:.

## ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஏழாம்பத்தில் இரண்டாந் திருவாய்மொழி முற்றிற்று.

ஆ— (வெள்ளைச்சுரிசங்கு) இப்பிராட்டியோடே பெரியபெருமாள் ஸம்ஶ்லேஷரஸத்தை யநுபவித்து அந்த ஸம்ஶ்லேஷரஸ முள்ளடங்காதபடி பெருகினவாறே அதுஸாத்மிக்கைக்காகவுமாஶ்ரித ரக்ஷணார்த்தமாகவுந் தென்திருப்பேரையிலே எழுந்தருளத் திருவுள்ளத்தே கோலியருளி, இவளுடைய ஸமாதாநார்த்தமாகவிவளிடத்திலே க்ருத்ரிமஸாந்த்வநத்தைப்பண்ணியருளி தென்திருப்பேரையிலே வேட்டைக்குப் போய் வருகிறோமென் றருளிச்செய்ய, இப்படி வஞ்சிதையானவிவள அஜ்ஞாதவிஶ்லேஷையாகையாலுமிவனெழுந்தருளுகை யிவனைக்காணாதொழிகைக்கு ஹேதுவென்னுமிடமறியாமையாலு மெழுந்தருளஸம்மதித்துவிஜயத்தை யாஶாஸித்து

## மூன்றாந்திருவாய்மொழி.

இ— கீழ்ப்பாட்டில்சொன்னபடியே ஆழ்வார் பெரியபெருமாளோடு ப்ரதமஸம்ஶ்லேஷ விஶேஷத்தைப் பெற்று ஸந்துஷ்டராயிருக்க விஶ்லேஷ தஶையிலபோலே இத்திருவாய்மொழியிலே விரஹிணியானவொரு பிராட்டியினுடையபேச்சுக்களைப் பேசுகையஸங்கதமன்றோவென்ன, இப்போதிவர் ப்ரதமாநுபவ விஶேஷமாத்ரத்தாலே ஸந்துஷ்டராயிருந்தாரேயாகிலும் பாஹ்யஸம்ஶ்லேஷங் கிடையாமையாலே பின்னையுமவஸந்நராய் இப்போதவனோடு பாஹ்யஸம்ஶ்லேஷம் பெறவேணுமென்று த்வரைப்படுகிற தம்முடைய தஶையை. பெரியபெருமாளோடு ஸம்ஶ்லேஷித்துப் பிரிந்து விரஹார்த்தையான வொருபிராட்டியானவள் தான் திருப்பேரையில செல்லவேணுமென்று அன்னைமாரையும் தோழிமாரையுங் குறித்துச் சொல்லுகிற வாக்யரூபத்தாலே பேசுகிறாரென்கிற கருத்தாலேயவதரிப்பிக்கிறார் (இப்பிராட்டியோடேயித்யாதியால) இப்படி ஸ்வரூபத்திலே இத்திருவாய்மொழி ஸங்கதமானாலும், ஶப்தரூபத்திலே பெரியபெருமாளோடு ஸம்ஶ்லேஷிக்கவேணுமென்று கீழ்த்திருவாய் மொழியிலே வ்யஸநப்பட்ட விப்பிராட்டி யித்திருவாய்மொழியிலே திருப்பேரையிலேசெல்லவேணுமென்று பேசுகையஸங்கதமன்றோவென்ன வருளிச்செய்கிறார் (அந்தஸம்ஶ்லேஷரஸமித்யாதியால்) இக்கணஸம்ஶ்லேஷம் நடவாநிற்க, இவளவன்விஶ்லேஷத்தை ஸஹிப்பளோ, இவள் ஸஹிக்கவில்லையாகில் அவனிவளை விஶ்லேஷித்துப்போகை யுசிதமோவென்ன வருளிச்செய்கிறார் (இவளுடைய ஸமாதாநார்த்தமாகவித்யாதியால்) (அஜ்ஞாதவிஶ்லேஷையாகையாலுமென்றது ஸம்ஶ்லேஷரஸ த்ருப்தையாகையாலே விஶ்லேஷமின்னபடி யிருக்குமென்று தெரியாதே போம்படி அத்தை மறந்தவளாகையாலு மென்றபடி. (இவனெழுந்தருளுகை யித்யாதி) இவன் திருப்பேரைக் கெழுந்தருளுகிறது இவனைக்காணாதே போருகைக்கு ஹேதுவென்னு மிடத்தை யறியமாட்டாதபடி ருஜுஶீலையாகையாலு மென்றபடி இவன் திருப்பேரைக் கெழுந்தருளுகிறதுவும ஒரு ஸம்ஶ்லேஷ விஶேஷ மென்றே எண்ணிக்கொண்டிருந்தா ளென்று கருத்து. இப்படி அவனைப்பிரிந்த விவள்வசனுந் தன்னோடு அவன் ஸம்ஶ்லேஷித்திருந்த தஶையிலுண்டான வவனுடைய வழகுகளை நினைந்துச்சொல்லு மத்தனையொழிய வக்ஷஸ்ஸ்தலத்திலே யிருக்கிறதான் காணாதவவனுடைய வ்யாபாரங்களைவெள்ளைச்சுரிசங்கொடித்யாதியாலே யிவள் பேசக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (விஜயத்தை யித்யாதியால்)

ஒ— ஸம்ஶ்லிஷ்டீயதஶைக விரஹவிஷ்ணா ஸ்ரீரங்கநாயகீ தத்ப்ரேரிதத்ருஶா ஹா ஸந்நிஹிதம் திருப்பேரை திவ்யதேஶம் கந்தும் வ்யவஸிதா மாத்ராதிஹிதவாக்யமாணா "ஶாக்ஷகோ நமஸ்ஸு: பரவே நிருபம: ஶோ வகாரி விகாஜிஷ்ணுஸௌநிஷ்டவ்யாஸகூட உதாரவிபவ நக்ஷத்ரஸத்மக்கோம்ஸாய த்ருஶ்ய: | ஶ்ரீவத்ஸாங்க ஸ்ரீ ஶகாரவாரஸங்கம்பஸ்வாமகாந்த்ர ஶேஷ ஸ்வம்மாத்ருஶாவ வ்யாடயதி ஹரி ஶ்லோத்ருஶம்ஸநாமி:" ‖ இத்யுக்தீத்ரா ஶாக்ஷகாதிநா நந்ஸாய கவஶ்ய திவ்யதேஶம் ஜகிஷ்யாமீத்ராஹ.

ப— அடியையடைந்தாள் போலிவளணுகி யடைந்தன ளென்னுமபடி முகில வண்ணனை பெரிய பெருமாள்திருவடியையடைந்த விப்பிராட்டியோடேபெரியபெருமாள் ஸம்ஶ்லேஷரஸத்தை யநுபவித்துஅந்த ஸம்ஶ்லேஷரஸ முள்ளடங்காதபடி ஶயநாகமாகப் பெருகினவாறே, அது ஸாத்மிக்கைக்காகவு மாஶ்ரித ரக்ஷணார்த்தமாகவுந் தென் திருப்பேரையில் எழுந்தருளத் திருவுள்ளத்தேகோலியருளி, இவளுடைய ஸமாதாநார்த்தமாக விவளை க்ருத்ரிமஸாந்த்வநத்தைப் பண்ணியருளித் தென் திருப்பேரையிலே வேட்டைக்குப் போய் வருகிறோமென்றருளிச்செய்தருள, இப்படிவஞ்சிதையானவிவள் அஜ்ஞாத விஶ்லேஷையாகையாலும், இவனெழுந்தருளுகை இவனைக் காணாதொழிகைக்குஹேதுவென்னுமிடம் அறியாமையாலும் எழுந்தருள ஸம்மதித்துவிஜயத்தை யாஶாஸித்து

மூ— வெள்ளைச் சுரிசங்கொடாழியேந்தித்

ஆ— ஆஶீர்வாதங்களைக் கொடுத்தருளி "ஶுபாஶ் சந்தநவப்ராஜ கந்தமால்யாநி ஸம்ப்ரயுஜ்ய" என்னும் ப்ரக்ரியையாலே திருப்பல்லாண்டு பாடிக்கொண்டு திருவணுக்கன் திருவாசலளவும் பின்னே யெழுந்தருளப்பெரியதிருவடி திருத்தோளிலே யேறியருளி ஒரு தாமரைத் தடாகம் மலர்ந்தாப் போலேயிருந்த திருக்கண்களாலேயிவளைப்பிரிந்துபார்த்தருளி, இவளாலேயநுஜ்ஞாதனாய்த்தென் திருப்பேரையிலே யெழுந்தருள, இவளவனைக்காணாமையாலே அத்யந்தவ்யஸநையாய் அவனெழுந் தருளியிருந்த தென்திருப்பேரையிலே யெழுந்தருள வுபக்ரமிக்க இவளுடைய திருத்தாயாரும் தோழிமாரும் மற்றுமுள்ள பந்துக்களுமிவளை ப்ரதிபந்திக்க, நான்போகை தவிரேன், தனியே போனாளென்னும்பழியுங்களுக்கு வாராமே நீங்களேயென்னைத்தென்திருப்பேரையிலேயீண்டனக் கொண்டுபோய்விடுங்கோளென்கிறாள்.

நிரதிஶயஸௌந்தர்ய விஶிஷ்ட நிரவதிக ஸௌரப்யயுக்தம்போலே யிருந்த ஸ்ரீபாஞ்சஜந்யத் தையும், நிரதிஶய தீப்தியுக்தஸூர்யமண்டலம்போலேயிருந்த திருவாழியையு மேந்தி,

இ— ஆஶீர்வாதங்களைக் கொடுத்தருளி என்கிறவிடத்திலே "ததஸ்ஸ்வஸ்த்யயநம் க்ருத்வா மந்த்ரவித் விஜயைஷிணா ஜ்ஞாதிபிஸ் ஸஹ ராமஸ்ய ப்ரயாணே ஸ்வஸ்திவாசநம்" என்கிறஶ்லோகமிஹ ப்ரேக்ஷ்யம். திருவணுக்கன் திருவாசலளவுஞ் சென்று ப்ரயாணமங்களங்களையெல்லாங் காண்கையாலே இவளவற்றைச் சொல்லக்கூடுமென்றதாய்த்து. பிரிந்து பார்த்தருளி என்றது திரும்பிப்பார்த்தருளியென்றபடி. ❋

வெள்ளைச்சுரிசங்கொடு என்கிறதற்குத் தாத்பர்யம் (நிரதிஶயஸௌந்தர்யாதியால்) ஆழியேந்தியென் கிறதற்குத் தாத்பர்யம் (நிரதிஶய தீப்த்யாதியால்)

ஈ—ஶ— க ❋ அன்னைமீர்காள் - மாத்ருஜநங்காள், வெள்ளை - தவளமான, ஶ்யாமளமான திருமேனிக் குப் ப்ரதிபடமாம்படி அதிதவளமான என்றபடி. சுரிசங்கொடு - சுரியையுடைத்தான ஶங்கத்தோடே, சுரி-சுழல், அதாவது சுழிபோலே வர்த்துலமான ஆவர்த்தரூபஸம்ஸ்தாநவிஶேஷத்தையுடைத்தான ஸ்ரீபா ஞ்சஜந்ய விஶேஷத்தோடேகூட என்றபடி. ஆழி - சக்ரத்தை, அப்படியொருவிஶேஷண மிட்டுச்சொல்ல வொண்ணாதபடி அதிஸுந்தரமான ஸ்ரீஸுதர்ஶநத்தைஎன்றபடி. ஏந்தி-அவற்றின் ப்ராதிஶயத்தாலே திருக்கைகளாலே ஏந்திக்கொண்டென்றபடி.

ஒ— ( வெள்ளை இதி ) வெள்ளை சுரி சங்கொடு ஆழி ஏந்தி - தவளேந ஸுஷிரவதா ஶங்கேந ஸஹசக்ரம் த்ருத்வா,

ப— ஆஶீர்வாதங்களைக் கொடுத்தருளி "ஶுபாஶ் சந்தநவப்ராஜ கந்தமால்யாநி ஸம்ப்ரயுஜ்ய" என்னும் ப்ரக்ரியையாலேதிருப்பல்லாண்டுபாடித் திருவணுக்கன் திருவாசலளவும் பின்னே யெழுந்தருள பெரியதிரு வடி திருத்தோளிலே யேறியருளி, ஒரு தாமரைத்தடாக மலர்ந்தாப்போலே யிருந்த திருக்கண்களாலே யிவளைப்பிரிந்து பார்த்தருளி, இவளாலே அநுஜ்ஞாதனாய்த் தென் திருப்பேரையிலே யெழுந்தருள, இவ ளைக் காணாமையாலே அத்யந்த வ்யஸநையாய் அவனெழுந்தருளி யிருந்த தென்திருப்பேரையிலே எழுந் தருள வுபக்ரமிக்க விவளுடைய திருத்தாயாரும் மற்றுமுள்ள பந்துக்களு மிவளை ப்ரதிபந்திக்க நான் போகை தவிரேன் தனியே போனாளென்னும் பழி யுங்களுக்கு வாராமை நீங்களே யென்னைத் தென் திருப்பேரையிலே ஈண்டெனக்கொண்டுபோய் விடுங்கோளென்கிறாள்.

இப்படி கங்குலும்பகலு மென்கிற விரண்டாந்திருவாய்மொழியில் ஸர்வேஶ்வரனுடைய ப்ரஸாதித ஸ்வ ஜநதாஶரண்ய ரக்ஷைகஸாமர்த்யத்தை யுபபாதித்தருளி மேல் ஸமாஶ்ரித ப்ரகடித்க்ருதஜ்ஞத்வத்தை உபபாதிக்கிறார். ததுக்தம் "ஶ்ராந்தக்லேஶ த்விஸரணாஸிஃ" இதி.

இதில்முதல்பாட்டில், பிராட்டி பாவபந்தமாம்படி தனக்கு வர்த்திக்கிற வ்யஸநத்தாலேதென் திருப்பேரையிலே போகவேணுமென்று தனக்குப் பிறந்த தஶையை திருத்தாயார்க்குச் சொல்லுகிறாள். (வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தி) "தவளவொண் சங்குசக்கர மென்றபடியை யநுவதிக்கிறபடி. முகில் வண்ணனென்றவன்நிறத்துக்குப்ப்ரதிபடமான வெளுப்பையுஞ்சுரியையுமுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யும் பாவபந்தமான வழகையு முடைத்தான திருவாழியையும் ஏந்தி.

மூ — தாமரைக்கண்ணனென் னெஞ்சினூடே| புள்ளைக்கடாகின்ற
வாற்றைக்காணீரென்சொல்லிச்சொல்லுகேனன்னைமீர்காள்|

ஆ — பொன்மலையின்மீமிசைக்கார்முகில்போலே பெரியதிருவடிதிருத்தோளிலேயேறியருளி, இலங்கொளி சேராவிந்தம்போன்ற நீண்டகண்களை யுடையனானவனென்னெஞ்சினூடேசாரிகைத்திரிந்தருளுகிற படி நீங்கள் காண்கிறிலிகோள். இன்னபடியென் றெனக்குச் சொல்லநிலமாகிறதில்லை. ஆதலாலவனையொரு க்ஷணங்காணுதொழியில் தரிக்கமாட்டேன்;

இ — புள்ளைக்கடாகின்றவென்கிறவிடத்தில ஸம்ப்ரஸிஜாஸம்ப்ருக்தயருத்தர் (பொன்மலையித்யாதியால்)மீமிசை என்றது உபரி என்றபடி. கநகாசலொபரிகாளமேகம்போலே என்றபடி. தாமரைக்கண்ண னென் கிறதற்கு திருமொழிப்பாசுரந்தாலே தாத்தர் (இலங்கொளியித்யாதியால்) இலங்கொளி- விளங்காநிற்கிற காந்தியானது, சேர்- சேர்ந்திருக்கிற, காந்திவ்யவஸ்தமாயிருக்கிறவென்றபடி. அரவிந்தம்போன்ற- ஸாவிந் ஸத்ருசமான, புள்ளைக்கடாகின்றவாற்றை என்கிறதற்குத் தாத்தர் ( சாரிகை இத்யாதியால் ) என்சொல் லிச் சொல்லுகே னென்கிறதற்குத் தாத்தர் (இன்னபடி இத்யாதியால்) வசவப்ரஸ்ருத்துக்குப் வாசகதா த்தர் (ஆதலாலித்யாதியால்)

ஈ—ப — தாமரைக்கண்ணன்-ஸ்ரவண தாசேர ஸவிவொவநன், அவயவங்களையுந்திருக்கண்களையும்சேரவநவ லாபித்தது இவைகளுடைய ஸந்நநு ஸஹாவம்ஸந்நநுத்துக்குண்டா யிருக்கையாலே. அதாவது திருக்கண்களைப்போலே திவ்யாவயவங்களும் திருமேனிக்கலங்காரமா யிருக்கையாலும் திவ்யாவயவங்களைப் போலே திருக்கண்களும் எல்லாரையுந்தோற்றுங்காலிலே விழப்பண்ணுகையாலு மென்றபடி. என்னெஞ் சின் - என் நெஞ்சினுடைய, ஊடே - மத்யத்திலே, புள்ளை-பக்ஷியை, கடாகின்ற- அதிவேகமாக நடத் துகிற, ஆற்றை - ப்ரகாரத்தை. ஆறு - ப்ரகாரம், கடாகின்றஆற்றைஎன்கிறவிடத்திலே ஸந்தியிலே டகாராகமம். காணீர் - காண்கிறிகோளிலே, உங்கள்நெஞ்சிலேதோற்றுத ரூபத்தைக் கொண்டு நீங்க ளிதுகூடாதென்றிருக்கக்கூடுமோ வென்றுகருத்து. நாங்கள் காணுமாகில் நீசொல்லலாகாதோவென்ன உத்தரஞ் சொல்லுகிறுள். என் சொல்லி - என்ன பாசுரத்தைச் சொல்லி, சொல்லுகேன் - என்னெஞ்சில் நடக்கிற வாஸ்யத்தைச் சொல்லக்கடவே னென்றபடி. அதுவாசாமகோசரமென்று கருத்து.

ஒ — தாமரைக்கண்ணன் - புண்டரீகாக்ஷ:, என் நெஞ்சின் ஊடே - மத்யதேசே, புள்ளைகடாகின்ற ஆற் றைகாணீர்- பக்ஷிவாஹனப்ரகாரஸஹிதந்தவஸ்யதி, ஸமஸ்தாஸந்தப்ரக்ஷாகஸித்யஸ்ய: வா த்தா "வத்தாக்ஷம் ஸங்ஹ்யஸ்ய" இதி. என்சொல்லிசொல்லுகேன்அன்னைமீர்காள்-ஹேமாதர: கம்வாவ கம்ஸம் வ்யதிகதமஸம்வ்யதிவர்ஷ்யாமிதாத்ருஸாஸம்வ்யதிவாசகஸப்தவவநாஸ்தீத்யா:.

ப — குளிர்த்தி செவ்வி விகாஸங்களாலே தாமரைபோலுள்ள திருக்கண்வழியே அகவாயில் தண்ணளி யைக் காட்டுமவன். கண்களோடு திவ்யாவயவங்களைக் கூட்டுகிறது அழகுக்குத் தோற்பித்தபடிக்கு. திருக்க ண்களும் "ஜிதந்தே" என்னப பண்ணுமிறே. கைக்கு ஆழ்வார்க ளாபரணமா யிருக்குமாப்போலேயாயி ற்றுமுகத்துக்குத்திருக்கண்களாபரணமாயிருக்கும்படியும். தங்கள்நெஞ்சிலில்லாமையாலேஇதுகூடாதென் றிருப்பார். அதுக்காக(என்னெஞ்சினூடேஎன்கிறுள். (புள்ளைக்கடாகின்ற)ஹம்ஸவக்ரவாகங்கள்போலே ஆழ் வார்களும்நாடுபடவலர்ந்ததாமரைபோலேயிருக்கிறதிவ்யாவயவங்களும், அத்தடாகத்தில்நீருமிழையும்போலே யிருக்கிற திருமேனியுமாய், அத்தைத்தனிய வொரு மேருவஹித்தாப்போலேயிருக்கிறபெரியதிருவடியோ டேயிவர்திருவுள்ளத்தே யுலாவுகிறபடி. "அரவத்தமளியினோடு மழகியபாற்கடலோடு மரவிந்தப்பாவையுந் தானுமகம்படிவந்து புகுந்து" என்கிறபடி. (கடாகின்ற) அகவாயில்நின்று சுழிக்கு மித்தனையோ, என்றவன் கூவித்து வடிம்பிட்டுத் தாக்க, " ஓங்காண், நீயறிந்தாயோ " என்று வெருவித்து மீளாநிற்கும் (கடாகின்ற வாற்றைக் காணீர் ) நடத்துகிற ப்ரகாரத்தைக்காணீர். காணலாமான வஸ்துவேநத்துக் குவலக்ஷணம் வே ணுமோ, காண்கிறிலீர். வஸ்துவேநமும் காயப்ரகாரமன்றிக்கே யொழிகிறது நிரோயிக்கிற நிவப்யத்தா லேயிறே. உங்களுக்குவசவொவக்ஷங்கேட்கிறதில்லையோ. ப்ரஸித்தமான வஸ்துவேஷம்லக்ஷிக்க வேண்டுவ தே. என்னைப்போலேஉட்கண்ணாலேகாணிகோள். நாங்கள்கண்டிலோம், கண்டநீசொல்லிக் காணென்றுர்கள் (என்சொல்லிச்சொல்லுகேன்)உங்களுக்கென்னபாசுரமிட்டத்தைச்சொல்லுவது. உங்கள்கண்ணுக்கு விஷ யமாகாதாப்போலேயென்வாக்குக்குவிஷயமாகிறதில்லை. உட்கண்ணாலேகண்டவிஷயம் ஐயத்தாராவஹித்த் தாலேசொல்லிமுடிக்கப்போகாது. (அன்னைமீர்காள்)ஜாதாம்ஸங்கொண்டு "யொயயதஃவரஸ்ரம்பன்ன

மூ— வெள்ளச்சுகமவன்வீற்றிருந்தவேதவொலியும்விழாவொலியும் । பிள்ளைக்குழாவிளையாட்டொலியுமறாத் திருப்பேரையிற் சேர்வன்நானே ॥ க॥

ஆ— வேதகோஷத்தாலும் மஹோத்ஸவ கோஷத்தாலும் க்ரீடாபரரான பாலர்களுடைய பரிபாஷா மணஸ்துதி கோஷத்தாலும் ஸம்ருத்தமான திருப்பேரையிலே ஐச்வர்ய ஜநித நிரவதிக ஸௌந்தர்யத்தையுடைய நித்யனாய் ஸம்ருத்தனாய்க் கொண்டிருக்கிற இருப்பைக் காணவேணும்; நீங்களென்னைக் கொண்டுபோய் விடீர்களாகில் நானேயாகிலும் போவேனென்று தன்னை ப்ரதிஷேதிக்கிற தாயாரையும் தோழிமாரையுங் குறித்துச்சொல்லுகிறாள். க

இ— வேதவொலியுமித்யாதிவிளையாட்டொலியுமறா இத்யந்தத்துக்குத் தாத்பர்யம் (வேதேத்யாதியால்)க்ரீடாபரரானவென்கிறவிடத்திலே "பாலாச்சவிக்ரீடாபரா ந்ருத்யகீதாதிரதாஸ்ஸம்பவ: । ராமாஷிதவதாம் பஞ்சாரஸுநாராவ ப்ரியம்வதா:" என்கிற ச்லோகஸித்தம். வெள்ளச்சுகமவன் வீற்றிருந்த என்கிறதற்குத் தாத்பர்யம் (ஐச்வர்யேத்யாதியால்)சேர்வன்நானே என்கிறவிடத்திலவதாரணத்துக்குத் தாத்பர்யம்(நீங்களென்னையித்யாதியால்)சேர்வன்நானேஎன்கிறதற்குத் தாத்பர்யம் (நானேயாகிலுமித்யாதியால்.) * *

இ—ப— வெள்ளச் சுகம் - வெள்ளமான ஸுகங்களை யுடையவனான, நிரவதிகாநந்த பரிதனான வென்றபடி. அவன் - அந்த ப்ரஸித்தனே, வீற்றிருந்த - வீறுதோன்றும்படி இருந்த, வீறு- உத்கர்ஷமும், ஸமுத்கர்ஷமுந்தோன்றும்படி எழுந்தருளி இருந்தவிடமான என்றபடி. இது திருப்பேரைக்கு விசேஷணம். வேதவொலியும் - வேதகோஷமும், ஒலி-கோஷம், விழாவொலியும் - உத்ஸவ கோஷமும், விழா - உத்ஸவம், உத்ஸவங்களிலுண்டான மங்களவாத்யாதி கோஷமுமென்றபடி. பிள்ளைக் குழா - பாலஸமூஹத்தினுடைய, குழா - ஸமூஹம், விளையாட்டொலியும் - க்ரீடநத்திலுண்டானகோஷமும், க்ரீடநகாலத்திலே பரஸ்பரமவர்கள் சொல்லுகிற மதவசன கயாகோலாஹலமுமென்றபடி. அறா - அறாததான, விச்சேதியாததானவென்றபடி. இதுவெல்லாம் நித்யமாக நடவாநிற்கிறதான வென்றபடி. திருப்பேரையில் - திருப்பேரையென்கிற திவ்யநகரத்திலே, நானே - நான்தானே, நீங்கள் கொண்டுபோய் விடீர்களாகில்நான்தானேயாகிலு மென்றபடி. சேர்வன் - போவேன். க

ஒ— வெள்ள சுகம் அவன் வீற்றிருந்த - ஆநந்தப்ரவாஹ யுக்தஸ்ய ஸமுத்கர்ஷஸ்யாஸிகாயாஸ்ஸதே, வேத ஒலியும் விழா ஒலியும் பிள்ளை குழா விளையாட்டு ஒலியும் அறா - வேதகோஷேண உத்ஸவ கோஷேண பால ஸமூஹக்ரீடா கோஷேணச அவிநாஸதே, திருப்பேரையில் - உதிதஸஜ்ஞதிவ்ய தேசே, நானேசேர்வன் - அஹமேகாகிநேவ கமிஷ்யாமி த்யபூ:. க

ப— லாயிற்றிரேவஸஜாதீயைகளானீர்கோளாகில். என்னவஸ்தாஜ்ஞாநமுமன்றிக்கேநிஷேதிக்கைக்குப்பழமைகொண்டாடுகிறீர்கோளித்தனையிறே. ஆகில்நீதான்செய்யப்பார்த்ததென்னென்ன; ஹிதஞ்சொல்லிமீட்க நினைப்பாரில்லாதவூரிலேபோய்ப் புகுமித்தனையென்கிறாள். (வெள்ளச்சுகமவன்)சுகவெள்ளத்தையுடையவன். விச்லேஷதசையிலும் ஸம்ச்லேஷஜநிதமானநிரதிசயஸுகம்மாறாதவன்.(வெள்ளை)என்றுபாடமானபோது மறுவற்ற ஸுகமென்கை.(அவன்வீற்றிருந்த)(தென்றிருப்பேரையில்)என்றந்வயம்.(வீற்றிருந்த)இத்தலையைத்தோற்பித்து தன் வெற்றியெல்லாம் அவ்விருப்பிலே தோற்றும்படி யிருந்த. அவன்மெய்மறந்தப்படி யிருந்தால் நாமும் மெய்மறந்திருக்கவோ, பரிபூர்ணனுமவன் செருக்காலே யிருந்தால், குறைவாளராய் நோவுபடுகிற நாமுமிருக்கவோ. அவன் முறைதப்பி நின்றால் நாமும்முறைதப்புமித்தனையன்றோ.(வேதவொலியும்) வேதகோஷமும் அவன் நெஞ்சொழிந்து பழம் புணர்ப்பையும் "ஜிதந்தே"என்னும்படிவெற்றிமாலைகளையும் கேளாநின்றான் காணும். (விழாவொலியும்) உத்ஸவ கோலாஹலமும்,(பிள்ளைக்குழா விளையாட்டொலியும்)"பாலாச்சவிக்ரீடாபரா ந்ருத்யகீதாதிரதாஸ்ஸம்பவ:" என்கிறபடியே அவ்வூரில்பருவம் நிரம்பாதபிள்ளைகளுமகப்பட மகரநெடுங் குழைக்காதனுடைய வடிவழகிலேதோற்று ஸம்பூதவித்து தத்விஷயக ஜயகோஷம்பண்ணாநிற்பர்கள். இதுவும் (அறா) அவிச்சிந்நமாய்நடக்குந்திருப்பேரையிலே (நான்சேர்வன்) ஜயித்தாரிருந்த விடத்தே தோற்றார் சென்று விழுமத்தனையிறே. தாமரைக்கண்ணனெனெஞ்சினூடேயிதெத்யதநந்தரம் 'வத்ஸாஜ்ஞேந ஹ்ருஜ்ஞஸ்ய" இதி. க

மூ— நானக்கருங்குழற் றோழிமீர்கா ளன்னையர்காளயற்
சேரியீர்காள்! நானித்தனிநெஞ்சங் காக்கமாட்டேன்

ஆ— (நானக்கருங்குழல்) ஸுரபிலை நீலகுடிலகுந்தள ஸநாதங்களை யுடைய தோழிமாரு மன்னையரும் மற்றுமுள்ள பந்துஜனங்களும், நீதனியேபோகை யீடல்லவென்று சொல்ல, அவர்களைக்குறித்து நானென்னுடைய ஸ்வதந்த்ரமானநெஞ்சைக்காக்கமாட்டேன்,

இரண்டாம் பாட்டு.

இ— நான்திருப்பேரையிலே போயல்லது நில்லேனென்று சொல்லவந்தவிவளத்தையிப்பாட்டிலே என்னெஞ்சவன்பக்கலிலேகிடக்கிறதென்று சொல்லுகை யஸம்மதமன்றோ வென்ன விதுக்குத் தாத்பர்யஞ் சொல்லுகைக்காக வவதாரிகை (ஸுரபிலை த்யாதியால்) இத்தால் ப்ரதமபாதத்தில் பதங்களுக்கர்த்தமும் ஸூசிதமாயிற்று. த்விதீயபாதத்துக்குத் தாத்பர்ய (நானென்னுடைய வித்யாதியால்)

இ—ப— உ. ✱ நானக் கருங்குழல் - ஸுரபிலை ஸுசிதங்களான குந்தளங்களை யுடையவர்களான, நானமென்று மயிர்முடிக்கிடும் கந்தத்ரவ்யத்துக்குப்பேர். நானக்கருங்குழலென்று ஸாகவார்த்திவ வத்ஸமாஸ:. இப்படி ஸுரபிலஸுசித குந்தளங்களான வுங்கள் ஸந்நிதி யில்லையாகில் நானங்குப்போகநினையாதிரேனோ வென்றுகருத்து. இவளோடு ஸம்ஶ்லேஷ காலத்திலே தானேசாற்றிக்கழித்தவையாய் "பரிஷ்வங்க ஸங்காந்த தோஷம்" என்கிறகணக்கிலே தங்களுக்கவன் ப்ரஸாதித்தருளினவையான ஸுரபிலத்ரவ்யங்களை யெல்லாமிததோழிமார்கள் அவன் பக்கல் ப்ரீதியாலே ஆதராதிசயித்துக்கொண்டிருக்கையாலே யவர்களுடைய ஸந்நிதியே யிவளுக்கு தத்கந்த வெஷ்டிதாதி ஸ்மாரகமாய்க்கொண்டு பாதகமா யிருக்கையாலே இப்படி சொல்லுகிறாள். தோழிமீர்காள் - ஸகிகாள், அன்னையர்காள் - தாய்மார்காள், அயல் - அசலாரான, ஸவிதோத்பந்ந ப்ராதிவேஸ்யரான என்றபடி. செரியீர்காள் - ஊரிலிருக்கிற ஸ்த்ரீகாள், சேரி - ஊர், சேரியிலிருக்குமவர்கள் சேரியார். சேரியீர்களென்று ஸம்போதநம். அந்தரங்கதைகளான தோழிமாரோடந்தரங்கைகளான தாய்மாரோடு அந்தரங்கரல்லாரான ஊராரோடு வாசியற இவளுடைய பாவத்தை யெல்லாரு மறியும்படியாய்த் திவளுடைய வாத்ஸல்யாதிசயம். நான்- அவன்பேர் சொன்னால் நையும் ப்ரக்ருதியான நான், இத்தனி நெஞ்சம் - இந்த தனிநெஞ்சத்தை, சொல்லிற்று கேளாதே ஸ்வதந்த்ரமான விந்த மநஸ்ஸை என்றபடி. "மாமஸ்கீகாரிஷ்யந்தி" என்றுகொண்டு ஒருவரையும் பாராதே போகாநின்ற விந்த மநஸ்ஸை யென்கை. காக்கமாட்டேன்- அவன் பக்கல் போகாதே தகையமாட்டேன்,

ஒ— (நானக்கருங்குழலித்தி)நானகரும்குழல் - ஸுரபில த்ரவ்யவாஸித நீலகேஸ பாஸமாக்நா:, தோழிமீர்காள் - ஹேஸகீஜநா:, அன்னையர்காள் - ஹேமாத்ருஜநா:, அயல்சேரியீர்காள்- ஸமீபஸ்தாமவாஸிந:, நான் இத்தனி நெஞ்சம் காக்க மாட்டேன்-அஹம் அஸஹாயமதீயஸ்வதந்த்ர சித்தம் ரக்ஷிதும் நஸக்நோமி,

ப— இரண்டாம் பாட்டில், தாய்மாரோடு தோழிமாரும் அயற்சேரியாரும் திரண்டுஹிதஞ்சொல்ல, உங்கள் ஹிதவசநங் கேளாதபடி என்னெஞ்சைக்கடல்கொண்டது காணுங்கோளென்கிறாள். (நானக்கருங்குழலித்யாதி) நறுநாற்றமுள்ள கருங்குழலி, யிவள்மயிர்முடி பேணாதே, ஸுரபிலங்காணில் முடியும்படியாயிருக்க, இவர்கள்குழல்பேணி ஸுரபிலங்கொண்டு காரியங்கொள்ளப்போருமோ வென்னில்; தாங்கள் தளர்ந்துகாட்டிலிவள் மிகவுந் தளருமென் றெப்பித்துக்கொண் டிருப்பார்கள். தந்தாமுடைய ஸந்நிதி யில்லையாகில் நானிங்கேயாறியிரேனோ வென்று ஸ்வமதந்தோற்றும்படி சொல்லுகிறாள் நானக்கருங்குழ லென்றது கொண்டு (தோழிமீர்காள்) ப்ரியஞ்சொல்வாரும் ஹிதஞ்சொல்வார் கோடியிலே புகுவதே. எல்லாரையு மொக்க ஸம்போதிக்கும்படி யாயிற்று, தன்னவஸ்தை ஜகத்ஸாக்ஷிகமானபடி. (தோழிமீர்காளித்யாதி) எங்ஙனே நானுகந்ததுகந்திகோள், எங்ஙனேஎனக்கு ப்ரியஹிதம் பார்த்திகோள், எங்ஙனே யதாஸீநைகளாயிருந்திகோள். "மாம்ஸமா நயதக்ஷிப்ரம், 'தயாக்ஷமா க்ஷயாத்வயி' 'பாபாயமேபவாக்ஷஹி" என்றுபிராட்டி ராவணனைக் குறித்துச் சொன்னாப்போலே ப்ரதிகூலர்க்குங்கூட தயைபண்ணவேண்டும்படிகாணுமிவளுடைய தசை. எங்கள்பக்கல் குறையுண்டோ, நீ மர்யாதை தப்பினவாறே நாங்களும்முறைதப்பினோமித்தனையன்றோ வென்ன (நானித்யாதி) இந்த ஸ்வதந்த்ரமானநெஞ்சை நான் தகையமாட்டேன். உன்னெஞ்சுனக்கு விதேயமாக வேண்டாவோவென்னில்;

மூ— னென்வசமன்றிராப்பகற்போய்த் | தேன்மொய்த்தபூம்பொழிற்
றண்பணைசூழ் தென் றிருப்பேரையில் வீற்றிருந்த | வானப்பிரான்
மணிவண்ணன் கண்ணன் செங்கனிவாயின் றிறத்ததுவே ‖ உ ‖

ஆ— எனக்கு விதேயமன்று, ஸம்ஸ்ருத ஸம்ஸாரிகளைக்காகத் திருநாட்டில் நின்றும் ஸ்ரீவஸுதேவர் திருமகனாய்வந்துபிறந்தருளி, அக்காலத்தில்பெறாதாருடைய இழவுதீரும்படி, தேன்மொய்த்த பூம்பொழில்தண்பணைசூழ் தென்றிருப்பேரையில் ஸர்வஸுலபனாயெழுந்தருளி யிருந்தவனுடைய ஸம்ஶ்லேஷத்தாலே புதுக்கணித்த திருப்பவளத்திலே யென் னெஞ்சிராப்பகல்போய்ப் படிந்து கிடக்கும், இனிநானெங்ஙனே போகாதிருக்கும்படி யென்கிறாள். உ

இ— மணிவண்ணனென்கிறதற்குத் தாத்பர்யம் (ஸம்ஸ்ருதேத்யாதியால்) கண்ணனென்கிறதற்குத் தாத்பர்யம் (ஸ்ரீவஸுதேவேத்யாதியால்) அக்காலத்திற் பெறாதாருடைய என்றது அந்த க்ருஷ்ணாவதார ஸமயத்திலே யநுபவிக்கப் பெறாதாருடைய என்றபடி. வானப்பிரானென்கிறதற்குத் தாத்பர்யம் (ஸர்வஸுலபனித்யாதியால்) பாட்டுக்குப்பரமதாத்பர்யம் (இனிநானித்யாதியால்.) * * * * *

இ—ப— என்வசமன்று- எனக்கு விதேயமன்று, இது-இந்த ஸ்தலமானது, இராப்பகல்-ராத்ரிந்திவம், சில போது பகவத்விஷயமும் சிலபோது ஸம்ஸாரயாத்ரையுமாயிருக்கத்தக்கதன்றிறே ஹ்ருதயங்கள் சொல்லுகிறது கலாவதேதன்றுகருத்து. போய்-விட்டுப்போய், இதுக்கு நிறுத்ததுவென்றதிற் தாத்பர்யம். தேன்-வண்டுகளானவை தேன்என்று வண்டுக்குமபேர். மொய்த்த-நிவிடமாகச்சூழ்ந்துக்கொண்டிருக்கிற, பூம்பொழில்- புஷ்போத்யானங்களாலும், தண்-ஶீதளங்களான, பணை-நீர்நிலங்களாலும், பணை-நீர்நிலம், சூழ்-பரிவ்ருதமான, தென்-தக்ஷிணதேஶீயமான, திருப்பேரையில் - திருப்பேரையென்கிற திவ்யநகரத்திலே, வீற்று- வீறும்பற்று, வீறு - உத்கர்ஷம், ஸர்வஸ்வாமித்வமெல்லாம் தோற்றும்படியென்கை. இருந்த- எழுந்தருளியிருந்தவனை, வானப்பிரான் - பரமபதத்திலிருக்கும் முதலுபகாரகனானவன், வானம் - பரமபதம், பரம பதத்திலே தானிருக்கிறபடியை யெல்லாம் நமக்காக இங்கே யிருந்துகாட்டுகிற உபகாரகனானவன் என்றபடி. மணிவண்ணன் - நீலமணிவர்ணனை, மணிபோலே முடிந்தாளலாம்படி ஸுலபனானவனென்றபடி. கண்ணன் - க்ருஷ்ணனுடைய, செங்கனிவாயின் திறத்தது- சிவந்தகனிபோலேயிருக்கிற அதரத்தின் விஷயத்திலே யிருக்கிறது கனி - பழம், இங்கே பிம்பபலமும் விவக்ஷிதம். திறம் - விஷயம், திறத்தி லிருக்குமது திறத்தது, தத்ஸக்தமாயிருக்கிறதென்றபடி. ஆதலால்நானங்குப்போய்ச்சேராதிருக்கமாட்டேனென்றாளாகுது. உ

ஒ— என்வசம் அன்று இது-ஏதந்மம வஶம் நபவதி, இராப்பகல்போய்- நக்தந்திவம்கத்வா, தேன்மொய்த்த பூம்பொழில் - மதுபஸம்வ்ருதோத்யாநயுக்தே, தண்பணைசூழ் - ஶீதோத்யாந பரிவ்ருதே, தென் திருப்பேரையில் -ஸுந்தர திருப்பேரை திவ்யதேஶே, வீற்றிருந்த- ஸர்வோத்கர்ஷதயாவஸத:, வானபிரான்-தேவதேவஸ்ய, வக்ஷ்யம் "பரமவ்யோம" இதி. மணிவண்ணன் கண்ணன் - நீலமணிவர்ணஸ்ய க்ருஷ்ணஸ்ய, செங்கனிவாயின் திறத்ததுவே - ஶோணபிம்பபலாதரஸோபாமேவ ததீயதாம்கத:. உ

ப— (என்வசமன்று)எனக்குவிதேயமல்ல,என்செய்வோம்,தாய்வேறுகண்டுவேறுக்கும்விஷயமானால்.எனக்குத்தானென்றிருக்கும்நிலைகுலைந்தது. தன்வழிபோனதொழுகும்படியாயிற்று. ஸஹ்யமாயிருப்பதொருபோது பார்த்து ஸகிந்துசொல்லவேண்டாவோவென்ன இராப்பகலென்னைவிட்டுப்போய் (தேன்மொய்த்தவித்யாதி) தேன் - வண்டு, வண்டு மொய்த்து பூத்தபொழிலையும் குளிர்ந்த நீர் நிலங்களையு முடைத்தான திருப்பேரையிலே ( வீற்றிருந்த ) பரமபதத் திருப்படங்களும் தோற்றும்படியிருக்க (வானப்பிரான்) கண்ணழிவற்ற மேன்மையை யுடையனாய் இங்கே யிருந்துகாட்டின உபகாரகன் (மணிவண்ணன்) வடிவிலும் தண்ணளி யுடையவன் (கண்ணன்) அவ்வடிவை இங்குள்ளார்க்குக் கொடுத்துக்கொண்டு நிற்கிறவன் (வானப்பிரானித்யாதி,)மேன்மையைவிடவோ,வடிவழகைவிடவோ,சீர்மையைவிடவோ. (செங்கனிவாயின்றிறத்ததுவே)கிண்ணகத்தி லொருசுழியி லகப்படுவாரைப்போலே, வாய்க்கரையிலேயகப்பட்டது. சிவந்துகனிந்ததிருப்பவளத்தினிடையாட்டத்தது. ஆசைப்பட்டவிஷயத்தைக் கரைகண்டதாகிலன்றோமீளுவது. வானப்பிரானித்யத்ர "பரமவ்யோம" இதி. உ

மூ— செங்கனிவாயின்றிறத்ததாயுஞ்செஞ்சுடர் நீண்முடித் தாழ்ந்ததாயுஞ் ।
சங்கொடுசக்கரங் கண்டுகந்துந் தாமரைக்கண்களுக்கற்றுத் தீர்ந்துந்।
திங்களு நாளும் விழாவருத தென்றிருப் பேரையில் வீற்றிருந்த ।

ஆ— (செங்கனிவாயின்) உன்னுடையலஜ்ஜைக்கும் நிறைவுக்கும்போருமோதனியே போகையென்று தோழிசொல்ல ; திருப்பவளத்தழகிலேபோய்ப்படிந்தும், திருப்பவளத்திலொளிகொழுந்துவிட்டு மேனோக்கி வளர்ந்ததோ வென்னும்படி நீண்டிருந்த திருவபிஷேகத்தி லழகிலே தாழ்ந்தும், திருவாழியுந் திருச்சங்குமேந்தின வழகைக்கண்டுகந்தும், மற்றோரழகுக் குரித்தல்லாதபடி தாமரைக் கண்களுக் கற்றுத்தீர்ந்தும், என்னுடைய நெஞ்சானது, திங்களும் நாளும் விழாவருததென்றிருப் பேரையிலேவீற்றிருந்த

## மூன்றாம்பாட்டு.

இ— ஸ்நேஹவன்பக்கலிலே ப்ரவணமாயிருக்கிறதென்று கீழ்ப்பாட்டிற்சொன்ன வஸ்துத்தையேசொல்லுகிற தாகையா லிப்பாட்டு வ்யாக்யானந்தரமென்ன விதுக்குத்தாத்பர்யஞ் சொல்லுகைக்காக வவதாரிகை (உன்னுடைய விதர்ஶநியால்) லஜ்ஜாதிகள் நிஶ்ஶேஷமாய்ப் போயிற்றென்கையிலேபாட்டுக்குத் தாத்பர்யமாகையால் வ்யாக்யானந்தரமில்லையென்றதாய்த்து. நிறைவு - அடக்கம். அதாவது நெஞ்சிலேயோடுகிறது. ஒருவர்க்குந் தெரியாதபடி யிருக்கை. செஞ்சுடர் நீண்முடித்தாழ்ந்ததாயு மென்கிறதற்குத் தாத்பர்யம் (திருப்பவளத்திலொளி யிதர்ஶநியால்) தாமரைக்கண்களுக் கற்றுத் தீர்ந்து மென்கிறதற்குத் தாத்பர்யம் (மற்றோரழகுக் கிதர்ஶநியால்) உரிததல்லாதபடியென்றது ஶேஷமாகாதபடி யென்கை. உரித்து-ஶேஷபூதம். * *

இ—ப— ௯ * தோழி - வாராய் ஸகியே, என்னெஞ்சம்- என்னுடைய ஹ்ருதயமானது, செங்கனிவாயின் றிறத்ததாயும் - சிவந்தகனிபோலே யிருக்கிற வதரவிஷயத்திலேஅதிப்ரவணமாயும், செஞ்சுடர்-அருண கிரணஶாலியான, நீண்முடி - உத்துங்கமானகிரீடத்திலே, தாழ்ந்ததாயும்-ப்ரவணமானதாயும், சங்கொடு-ஶங்கத்தோடு, சக்கரம்- சக்ரத்தையும், கண்டுகந்தும்- அநுபவித்துஸந்தோஷித்தும், தாமரைக்கண்களுக்கு-தாமரஸ ஸத்ருஶங்களான நேத்ரங்களுக்கு, அற்றுத்தீர்ந்தும் - மற்றொரு அவயவங்களுக்கும் ஶேஷமாகாதபடி யவற்றுக்கே ஶேஷமாயு மென்றபடி. இதுக்குநிறையு மிழந்தது வென்கிறத்தோடே அந்வயம். திங்களும் - மாஸங்களிலும், நாளும் - திநங்களிலும், விழா - உத்ஸவங்கள், மாஸோத்ஸவங்களும் நித்யோத்ஸவங்களுமென்றபடி. அருத - விச்சேதியாததான, தென்றிருப்பேரையில் வீற்றிருந்த - ஸ்பஷ்டம்.

ஒ— (செங்கனிவாயிதி) செங்கனிவாயின் றிறத்ததாயும் - ஶோணபிம்ப ஸத்ருஶாதராதீநதயா, செஞ்சுடர் நீண்முடி தாழ்ந்ததாயும்- ரக்தஜ்யோதிரூப தீர்க்ககிரீட ப்ரவணஞ்ச, சங்கொடு சக்கரம்கண்டு உகந்தும்- ஶங்கஸஹித சக்ரதர்ஶந ஹ்ருஷ்டஞ்ச, தாமரைகண்களுக்குஅற்றுதீர்ந்தும்-அம்போஜநயநயோ: உதாரப்ராவண்யாதிஶய ஶேஷத்வம் தச்சேஷியஞ்ச, என்னெஞ்சம் - மதீயசித்தம், திங்களும் நாளும் விழாஅருத- ப்ரதிமாஸம் ப்ரதிதிநஞ்ச உத்ஸவவிச்சேதரஹிதே, தென்திருப்பேரையில்- தக்ஷிணதிருப்பேரை திவ்யதேஶே, வீற்றிருந்த - ஸர்வோத்க்ருஷ்டதயா வஸத:,

ப— மூன்றாம்பாட்டில், மற்றவாடங்கலும்நமக்குநிலமன்றென்றுகைவாங்க, தோழிபொருத்தியும் நின்று நமக்கிது போராதுகாண், நெஞ்சை யொருங்கப் பிடித்து யரித்திருக்கவேண்டாவோ வென்ன,அந்நெஞ்சு தானினிச் செய்வதென், அதுவுந்தனக்குள்ளதடங்கலுமிழந்ததுகா ணென்கிறாள். (செங்கனிவாயின்றிறத்ததாயும்) "ஸர்வகந்த: ஸர்வரஸ:" என்கிறபடியே யநுபவியாநின்றால் பிறக்கும் நாநாரஸம் அவயவங்கள்தோறும் தனித்தனியே நெஞ்சுக்குண்டாகாநின்றது. பிரிவை ப்ரஸங்கித்து வாடினமுதங்கிளையு முவக்ருத்து தழு தழுத்து வருகிற திருவதரத்திலே யகப்பட்டபடி. அதிலும் அதரத்தில் பழுப்புக்குள் ளிழியமாட்டுகிறதில்லை. அவ்வாயிற் செல்லுந் தாழ்ச்சிதானொரு ஸம்ஸாரத்துக்குப் போருமாகாதே. பிரிவை ப்ரஸங்கித்துப் போகின்றபோது, உபயவிபூதிநாயகர், என்றுதோற்றும்படி யிருக்கிற திருவபிஷேகத்தைக்கண்டு தறைப்பட்டுக் காலைப்பிடித்தது. (சங்கொடிதர்ஶநி) பிரிந்தால் விரோதியைப் போக்க வரிகரமாய் வைத்தகண்மாற வொண்ணாத வழகையுடைய வாழ்வார்களைக்கண்டுகந்தது (தாமரை) "தவாஸ்மி" என்று சொல்லப்புக்குமாட்டா தொழிந்தால், குறையுந் தலைக்கட்டினதிருக்கண்களுக் காயிற்ற நந்யார்ஹமாக வெழுதிக்கொடுத்தது. நெஞ்சிப்படி விஷயாதீநமாகப் பலவடிவு கொண்டு (திங்களுமிதர்ஶநி) ப்ரதிமாஸம் ப்ரதிதிநம் உத்ஸவங்களிடைவிடாதமாஸத்திருநாளும் நித்யத்திருநாளுமோவாதபடி

மூ— நங்கள்பிரானுக் கென்னெஞ்சந் தோழிநாணு நிறையு மிழந்ததுவே ‖ ௩‖
இழந்தவெம்மாமைத் திறத்துப் போனவென்னெஞ்சினாருமங்கே யொழிந்தார் ‖

ஆ— நங்கள் பிரானுக்கு நாணும் நிறைவு மிழந்தது ; இனி எனக்கு நாணும்நிறைவுமுண்டோவென்று தோழியை நோக்கிச் சொல்லுகிறாள். ௩

(இழந்த) பக்ஷமோ அபக்ஷமோவென்று நிரூபியாதே போகப் பெறலாமோவென்றன்னைமார் தன்னைமுனிய ; இழந்தவெம்மாமைத் திறத்துப்போன வென்னெஞ்சினாரு மவனுடைய வழகைக் கண்டு என்னைமறந்து, வாராதேயங்ஙனே யொழிந்தார் ;

நாலாம் பாட்டு.

இ— திருப்பேரைக்கு நான்தானே போவேனென்றபோதே தானவன்பக்க லகுலீஸதை யென்றுமிடம் ஸுஷடமாயிருக்க விப்பாட்டிலு மவ்வாசத்தைச் சொல்லுகை வக்தராக்ஷியன்றோ வென்ன விருக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக வவதார் (பக்ஷமோ விதருஷியால்) அங்கே யொழிந்தாரென்கிறதற்குந் தாதர் (அவனுடையவழகை யிதருஷியால்)

இ—ப— நங்கள் பிரானுக்கு - நமமுடைய வுபகாரகனுக்கு, சுவபூரவதாரத்தாலே நமக்குவசமானவனு யுபகாரகனானவனுக்கு. நாணும் - லஜ்ஜையும், நிறையும் - அடக்கத்தையும், இழந்தது - ஸுஷடம். வாசகாரம்வாக்யவதாரணம். ௩

௪* இழந்த- என்றாலே இழக்கப்பட்டதான, அவனவஹரித்துக்கொண்டுபோனதான வென்றபடி. எம்மாமை- என்னுடைய மாமையுடைய, திறத்து- விஷயத்திலே, மாமை-காந்தி, அவ னவஹரித்துக்கொண்டுபோன வென்னுடைய காந்திக்காக வென்றபடி. போன - அவன்பக்கலிலே போனதான, என்னெஞ்சினாரும்- என்னுடைய நெஞ்சம், அவனுக்காக வன்றிக்கே என் காந்திக்காகப்போன வென் நெஞ்சமென்றபடி. நெஞ்சினாருமென்கிறவ ஹுவசநம்அங்கேபோயவரோடேகூடினவாறோமிகவும்பெரியவராயெ ன்னைமறந்துவிட்டாரென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக. அங்கே-அவ்விடத்திலேதானே, ஒழிந்தார்-நின்றுவிட்டார்,

ஓ— நங்கள்பிரானுக்கு-ஸ்வஸ்வாமிநே, வா + க்த்வா "ஷோவகாரீ" இதி. நாணும்நிறையும்இழந்தது.வே-லஜ்ஜா ஸ்ரீ. ஸங்கோசவாச்சிநஹராவிதருஷஸ்ய. உதீர்த்துமவகவஹூர்த ஜ்ஜாவாசிநஹீஅஷிதருஷஸ்ய. ௩

(இழந்தவிதி) இழந்த எம்மாமைதிறத்து - ஸவஹூர்த உக்காந்திவிஷயே, ஸவஹூர்த உக்காந்தி வ்யதருஹரணாஸ்ய திதியாவக. போன என் நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார், மதநோநாவைவி த பெதரவஷிதாநி, ஸதருதருவஹூவநா ஓநோ நாவிவரவேராஷவ்ய ஷிரஷெதாண வஸெவாஸ ஸூரஷ ஊஷதிகுவாமமாஹிவாயம்.

ப— (வீற்றிருந்த நங்களபிரானுக்கு) இவ்விருப்புநமக்காக்கிக்கொண்டிருக்கிற வுபகாரகனுக்கு. வா + க்த்வா "ஷோவகாரீ" இதி. (என்னெஞ்சந்தோழி)என்னெஞ்சினுடைய வன்மையும், நீ என்னெஞ்சைத் திருத்திக் கற்பிக்கப்பட்டவருத்தமும்அறிவுதியிறே (நாணுநிறையு மிழந்ததுவே) நான்தன்னை யிழந்தேன், நான் தன்னுடைய லஜ்ஜாவாசிக ளிரண்டையு மிழந்தது. இன்னெஞ்சை நா னெங்ஙனே தோழி யொருங்கப் பிடிப்பதென்கிறாள். ௩

நாலாம்பாட்டில், வருந்தியாகிலுமேதேனுமொன்றைக்கொண்டு போதுபோக்காதே இங்ஙனே செய்யலாமோவென்றுபொடிகிற தாய்மாரைக்குறித்துஎன்னெஞ்சமவனாலேயபஹூதமாயிற்று. நானெதைக் கொண்டு போதுபோக்குவ தென்கிறாள். (இழந்தவெம்மாமை) நமக்குள்ளது கொடுபோகிலும் நம்ஹேஷீக்குள்ள நிறத்தைக்கொடுபோகை யாவதென்னென்றஹிஸமித்து இப்போதே மீட்டுக்கொண்டுவருகிறேனென்று கூறித்துப்போன. (என்னெஞ்சினாரும்) என்னையொழிந்தங்கே நின்றார். யமா நிறந்தடக்கமாகவிழந்தவையடைய மீட்பதாகச் சொல்லிப்போன நெஞ்சினாருமங்கே கால்தாழ்ந்தார். வினைத்தலையிலே படையறுக்குமாப்போலே. வரிசையுங்கொடுத்துத் தம்மோடு ஸாதருவத்தியும் கொடுத்தார். வினைத்தலையில் படையறுக்கையாவது, யக்ஷஸயத்திலே யெதிர்த்தலையில் ஸேனையைத் தன்பக்கலிலே யாக்கிக்கொள்ளுகை. "ராஜாஹேஹுஷவிபீஷணஃ" என்னுமாப்போலே வரிசைபெற்றுத் திரியாநின்றார். (நெஞ்சினாரும்) நிறமீட்கப்போனாரும் நிறங்கொடுபோனாரோடொத்தார்

மூ— உழந்தினி யாரைக்கொண் டென்னுசாகோ வோதக்கட லொலிபோல வெங்கு।
மெழுந்த நல்வேதத் தொலி நின்றோங்கு தென் றிருப்பேரையில் வீற்றிருந்த।
முழங்குசங்கக்கையன் மாயத்தாழ்ந்தே னன்னையர்காளென்னையென்முனிந்தே॥௬॥

ஆ— இனி இங்கிருந்தென்ன ஸஹாயம்பார்ப்பது, ஆரோடே நிரூபிப்பது. ஓதங்கிளருகிற கடலினுடையகோஷம்போலே இருந்தசேதநமானவேதகோஷத்தாலேஸம்ருத்தமானதென்றிருப்பேரையிலேவீற்றிருந்தருளினவனுடைய, நண்ணுவசுரர் நலிவெய்தநல்ல வமரர் பொலிவெய்தும்படி முழங்குகிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தையேந்தினவழகு வெள்ளத்திலேபுக்கழுந்தினேன். இனியென்னைமுனிந்து ப்ரயோஜநமென்னென்றுதன்னுடைய வன்னைமாரைநோக்கிச்சொல்லுகிறாள். ௬

இ— உழந்தினியென்கிறதற்குத் தாத்பர்யம் (இனியித்யாதியால) ஆரைக்கொண் டென்னுசாகோ என்கிறதற்குத்தாத்பர்யம் (ஆரோடேயித்யாதியால்)நல்வேதஎன்கிறத்தைஉரைக்கிறார்(சேதநமித்யாதியால்)ஓங்குஎன்கிறத்தை உரைக்கிறார் (ஸம்ருத்தமானவென்று) முழங்குஎன்கிறதற்குத்தாத்பர்யம்(நண்ணுவசுரரித்யாதியால்)சுலோகார்த்தம்:-நண்ணு-தன்னையாஶ்ரயியாதவர்களான,அசுரர்-அஸுரர்களானவர்கள்,நலிவு-வியஸநத்தை,எய்து-அடைந்து, நல்ல-நல்லவர்களான, தன்னையாஶ்ரயித்தவர்களானவென்றபடி. அமரர்-தேவர்களானவர்கள்,பொலிவு-வ்ருத்தியை, எய்தும்படி- அடையும்படி. மாயத்தாழ்ந்தே னென்கிறதற்குத் தாத்பர்யம் ( அழகித்யாதியால் ) ※

இ—ப— இனி-இத:பரம், உழந்து - வருந்தி, அவனழகைக்கண் டென்றபடி. ஆரைக் கொண்டு-ஆரைஸஹாயமாகக்கொண்டு, என்-என்னத்தை, எந்தவஸ்துத்தைஎன்றபடி. உசாகோ-உசாவுவேன்,ஸம்லாபம் பண்ணி நிரூபிக்கக்கடவேனென்றபடி. உசாவுகை - ஸம்லாபம்பண்ணுகை, கோ வென்றது கிம்ஶப்தபர்யாயமாய்க்கொண்டு க்ஷேபார்த்தம். நெஞ்சு போனபின்பு யாரோடும் நிரூபிக்கக்கூடுமோ வென்றுகருத்து. ஓதக்கடல் - ஓதத்தை யுடைத்தான ஸமுத்ரத்தில், ஓதம் - தரங்க ஸங்கமணம், ஒலிபோல - கோஷம்போலே, எங்கும்- ஸர்வப்ரதேசத்திலும், எழுந்த - உஜ்ஜ்ரும்பிதங்களான, நல்- சேதநமான, வேதத்து- வேதங்களினுடைய, ஒலி - கோஷமானது, நின்று-ஸ்தாயியாய்க்கொண்டு, ஓங்கு- ஓங்காநின்ற, ஸம்ருத்தமாகாநின்றவென்றபடி. தென்றிருப்பேரையில்வீற்றிருந்த- ஸ்வஷம், முழங்கு- சப்தாயமாநமான, அந்த வேதகோஷ ப்ரதித்வநியாலே ஶப்தாயமாநமாகா நின்றவென்றபடி. சங்கக்கையன் - ஶங்கத்தைக் கையிலே யுடையவனான வெம்பெருமானுடைய, மாயத்து - மாயையிலே, ஆஶ்சர்யமான வழகிலே, ஆழ்ந்தேன் - மக்நையானேன், அன்னையர்காள் - தாய்மார்காள், என்னை - இப்படி யிருக்கிற வென்னை, முனிந்து - கோபித்து, என்- என்னப்ரயோஜந முண்டு, நீங்கள் தாய்மாரான மாத்ருத்தாலே கோபிக்கபோமோ வென்று கருத்து. ௬

ஒ— இனி உழந்து ஆரைகொண்டு - இத: பரம் பரிக்லேசகம் ஸஹாய மேலும்பரு, என் உசாகோ - கிம்வக்ஷ்யாமி, ஓத கடல் ஒலி போல - தரங்கயுக்த ஸமுத்ர கோஷவத், எங்கும் எழுந்தநல்வேதத்து ஒலிநின்றுஓங்கு - ஸதீவீந ஸ்திரவ்ருத்த வேதகோஷே, தென் திருப்பேரையில் - ஸுந்தர திருப்பேரைஸ்ரீதேசே, வீற்றிருந்த - ஸவிபூதிகஸ்ரேஷ்ட தயா வஸத:, முழங்குசங்ககையன்- ஸ்வநஜ்ஜஹஸ்தஸ்ய, வச்ரம் "விஜயத்துவம்" இதி. மாயத்துஆழ்ந்தேன்- மாயாயாம்மக்நாஸ்மி, அன்னையர்காள்-ஹேமாதர:, என்னை யென்முனிந்தே - மயிகோபம்க்ருத்வா கிம்ப்ரயோஜநம் ஸ்விதேஸ்ஷிதம் ஸப்தம். ௬

ப— (உழந்தித்யாதி) இனி நெஞ்சு போனபின்பு, உழந்து - வரிந்து (ஆரைக்கொண்டு) ஆரோடே கூடவத்தைச்சொல்லி (உசாகோ) நான்காலும் போக்குவது. தேஹாத்மாபிமாநிகளான ஸம்ஸாரிகளைக் கொண்டு போதுபோக்கவோ, "ஶரம்ஸ்வோஹம்" என்றிருக்கிற ப்ரஹ்மாநாதிகளைக் கொண்டு போது போக்கவோ, ஸமவேதநஹவத்திலே யநந்யவராயிருக்கிறநித்யஸூரிகளைக்கொண்டுபோதுபோக்கவோ இத்தலையை யுரிகூரைக்கொண்டு போனவனைக் கொண்டு போது போக்கவோ ; ஆரைக்கொண்டெத்தையுசாவுவது. (என்னுசாகோ) "ஸோஹாதஸதத்ராஹம்" என்னும்படியே யெனக்குமேதேனு முண்டோ, ஆனால் செய்யவடுப்பதென்னென்னில்(ஓதக்கடலித்யாதி)திரைக்கிளப்பத்தையுடையஸமுத்ரகோஷம்போலேஎங்குங்கிளர்ந்துஸாமகோஷமானது(நின்றோங்கு)எக்காலத்திலும் நின்றுபரம்பாநின்றுள்ள (தென்றிருப்பேரையில்வீற்றிருந்த முழங்குசங்கக்கையன்) வேதத்வநியானது ஸ்ரீபாஞ்சஜந்யத்தைக்கிட்டிப்ரதித்வநியெழாநிற்கும். (மாயத்தாழ்ந்தேன்) அவனுடையஸௌந்தர்யலக்ஷணாதிகளிலே மீளவொண்ணாதபடி யகப்பட்டேன். ௬

மூ— முனிந்துசகட முதைத்து மாயப்பேய்முலையுண்டு மருதிடைபோய்க் । கனிந்தவிள வுக்குக் கன்றெறிந்த கண்ணபிரானுக்கென் பெண்மை தோற்றேன் । முனிந்தினி

ஆ— (முனிந்து) உன்னுடையஸ்த்ரீத்வத்துக்குப் போருமோவென்றவர்கள் பின்னையுந்தன்னைமுனிய, ஸந்த்ராஸ்தீரூபாய்ரோஷத்தாலேஶகடத்தைப்பாய்ந்தழிவுசேஷ்டிதத்துக்கும்வஞ்சனையால்வந்தபேய்ச்சிமாயுமபடிமுலையுண்டசேஷ்டிதத்துக்கும், கனிந்தவிளவுக்குக் கன்றெறிகைக்காக விளங்கனியைக்குறித்துப்பார்த்தருளினபார்வைக்குமென்பெண்மைதோற்றேன். நீங்களினியென்னைமுனிந்து

## ஐந்தாம் பாட்டு.

இ— அவன்பக்கல் ஜ்ஞாநதஶாபந்நையானேன், என்னைநீங்கள் முனிகிறதென்ன ப்ரயோஜநமென்று கீழ்ச்சொன்ன அர்த்தத்தையே சொல்லுகையாலே இப்பாட்டு புநருக்தியன்றோவென்ன வ+ர் (உன்னுடைய வித்யாஷியால்) முனிந்து சகடமுதைத்து என்கிறதற்குத் தா+ர் (ஸம்ரம்பதஶாஷியால்) மாயப்பேய் முலையுண்டு என்கிறதற்குத் தா+ர் (வஞ்சனையா விதஶாஷியால்)

இ—ஶ— ரு * முனிந்து-கோபித்து, “ஸந்த்ராஸ்தீர்வ்யாரோஷஹ” என்கிறபடியேஸந்த்ராஸ்தீர்யாய் அது விளம்பித்தவாறே கோபித்தென்றபடி. சகடம் - ஶகடத்தை, உதைத்து - திருவடிகளாலே தாடநம்பண்ணி, மாய - வஞ்சகையான, பேய் - பூதனையினுடைய, முலை - ஸ்தநத்தை, உண்டு - அமுது செய்து, மருது - அர்ஜுநவ்ருக்ஷங்களுடைய, இடை - மத்யத்திலே, போய் - அஸுராவிஷ்டங்களானவையாற்றிலகப்படாதே தப்பிப்போய், கனிந்த - பக்வமான, விளவுக்கு - கபித்தவ்ருக்ஷத்துக்கு, விளவு-கபித்தம், கன்றெறிந்த - வத்ஸத்தை எடுத்தெறிந்தவனை, கபித்தாகாரனாய்நின்ற அஸுரன்மேலேவத்ஸாகாரனாய்வந்திருந்தஅஸுரனைஅநாயாஸேநகலலெறிவாரைப்போலே எறிந்தவிசித்ரசேஷ்டிதனையென்றபடி. கண்ணபிரானுக்கு - க்ருஷ்ணனை உபகாரகனுக்கு, அந்தக்ருஷ்ணாவதாரத்தில் விசித்ரசரித்ரங்களையெல்லாம் எனக்கு ப்ரகாஶிப்பித்த உபகாரகனுக்கென்றபடி. என்பெண்மை - என்னுடைய ஸ்த்ரீத்வத்தை, தோற்றேன்-இழந்தேன், இனி- இப்படியானபின்பு, அன்னைமீர்-தாய்மார்காள், முனிந்து-என்னைகோபித்து,

ஒ— (முனிந்திதி) முனிந்து சகடம் உதைத்து - கோபாத் ஶகடாஸுரனுரணேந தாடிதவதஃ, மாய பேய் முலை உண்டு- வஞ்சக பூதநாஸ்தநம் பீத்வா, மருது இடை போய் - அர்ஜுநயோர் மத்யம் கத்வா, கனிந்த விளவுக்கு கன்று எறிந்த- பக்வேந அஸுராவிஷ்டகபித்தவ்ருக்ஷே அஸுராவிஷ்டவத்ஸாந் க்ஷிப்தவதஃ, கண்ணபிரானுக்கு - க்ருஷ்ணஸ்வாமிநஃ, என்பெண்மை தோற்றேன் - மதீயம்ஸ்த்ரீத்வம் ந்யஸ்தவத்யஸ்மி, இனி முனிந்து - அதஃபரம்கோபித்வா,

ப— ஐந்தாம்பாட்டில், இங்ஙனே விரைகை ஸ்த்ரீத்வத்துக்குப் போராது காண், என்று தாய்மாரிசைக்க; அதுவும் பண்டேபோயிற்று. ப்ரயோஜநமில்லாத தஶையிலேகொடுபோகவில்லாதே, என்னையேக்கவே கொடுபோய்த்தென்றிருப்பேரையிலே விடுங்கோளென்கிறாள். முனிகிறதுதானெனக்கு ஹிதம்பார்த்தே, ஆனாலென் ஹிதத்திலே ப்ரவர்த்திக்கப்பாருங்கோள். (முனிந்திதஶாஷி) ஹிதமுமாய் ப்ரியமுமான முனிவிலே யகப்பட்ட நான் அஹிதமுமாயப்ரியமுமான வுங்கள் முனிவுக்கு மீளுவனோ. (முனிந்து சகடமுதைத்து) முலைவரவு தாழ்த்ததென்று சீறி நீட்டின திருவடிகளுக் கிலக்காய்ப் பொடிபட்டதாயிற்று சகடம் “ஸந்த்ராஸ்தீர் வ்யாரோஷஹ”விறே. (மாயப் பேய் முலையுண்டு)முலையை நினைத்துச்சீறினான்,என்று முலைகொடுக்கத் தாய்வடிவு கொண்டுவந்த வஞ்சகையான பேய்ச்சியை முடித்து. (மருதிடைபோய்) முலையுண்டால் தவழ மத்தனையிறே.புறம்பு நின்றும்வந்து நலிகையன்றிக்கே நின்றவிடத்தே நின்று தப்பாமே கொல்ல நினைத்த யமளார்ஜுநங்களைப் பொடிபடுத்தி. (கனிந்தவிதஶாஷி) அஸுராவேஶத்தாலே ஒன்று கனிந்த விளவாய், ஒன்றுகன்றாய் நின்றது ; அதிலே யொன்றையிட் டொன்றை யெறிந்து இரண்டையும் முடித்த (கண்ணபிரானுக் கென்பெண்மை தோற்றேன்) “அதோஸிமொகே பெகைவ ப்ரயிதஃபார்த்தோஹ்ஃ” என்றும் “ஜாநாதிபார்த்தஸ்ஸம்” என்றுஞ்சொல்லுகிற தன்னுடைய பாரம்யத்தைக் காட்டிக்காணு மிவளுடைய ஸ்த்ரீத்வத்தை யபஹரித்தது (முனிந்திதஶாஷி) இனிமீட்கலாமென்றோ நினைக்கிறது. மீட்க நினைக்கிற நீங்க ளவனுடைய அபதாநங்களுக்கு முன்னேயன்றோ மீட்கப் பார்ப்பது.

மூ— யென்செய்தீ ரன்னைமீர்காள் முன்னியவன்வந்துவீற்றிருந்த | கனிந்த
பொழிற் றிருப்பேரையிற்கே காலம்பெற வென்னைக் காட்டுமினே ‖௫‖
காலம்பெற வென்னைக் காட்டுமின்கள் காதல் கடலின் மிகப்பெரிதா |

ஆ— செய்வதென்; என்னுடையவரவுபார்த்து முன்னமேபோயவன்வீற்றிருந்த, நிரவதிகபோக்யமான சோலையை யுடைத்தான தென்றிருப்பேரையிலே கொண்டுபோயவன் பக்கலிலே யென்னை யீண்டக்காட்டிக் கொடுங்கோ ளென்கிறாள். ௫

(காலம்பெற) வேட்டைக்கெழுந்தருளினவத்தனையன்றோ, இப்போதேயெழுந்தருளுகிறானிறே. இங்ஙனே பதறவேணுமோ, என்று அவர்கள் சொல்ல; எனக்கவன்திறத்திலுள்ள அபிநிவேச வெள்ளத்துக்கொரு முடிவில்லை,

இ— முன்னியவன் வீற்றிருந்த என்கிறதற்குத் தா+ர் (என்னுடையவரவித்யாதியால்) கனிந்தபொழிலென்கிறதற்குத் தா×ர் (நிரவதிகேத்யாதியால்) திருப்பேரையித்யாதிக்குத் தா×ர் (தென்றிருப்பேரையிலேயித்யாதியால்.) * * * * * * * * *

## ஆறும்பாட்டு

எனக்கவன் பக்கலிலே அபிநிவேசமத்யந்தமென்றும் என்னைத் திருப்பேரையிலே கொண்டுபோய்க் காட்டுங்கோளென்றும் கீழேசொன்ன வசனங்களையே சொல்லுகிறதாகையாலே இப்பாட்டு வ்யாக்யானம் வேண்டாம் ஏன்றோவென்ன வவ+ர் (வேட்டைக் கித்யாதியால்) காதல் கடலின் மிகப்பெரிதா லென்கிறதற்குத் தா+ர் (எனக்கித்யாதியால்)

இ—ப— எனசெய்தீர் - என்னகாயஞ்செயயா நிறகிறிகோள், இந்தமுனிவாலொரு ப்ரயோஜநமுமில்லையென்றபடி. முன்னி - ஸங்கல்ப்ய, என்னுடைய வரவு பார்த்துக்கொண்டு எனக்கு முன்னேதானே என்றபடி. அவன்வந்து வீற்றிருந்த- அவன்வந்தெழுந்தருளி யிருந்தவிடமான, கனிந்தபொழில்- பரிபக்வமான உத்யானங்களையுடைத்தான, திருப்பேரையிற்கே-திருப்பேரையெனகிறதிவ்யநகரத்துக்கு, காலம்பெற - சீக்ரமாக,என்னை-அவன்வருமளவும்விளம்பம் பொறுக்கமாட்டாதவென்னை, காட்டுமின்- காட்டுங்கோள், திருப்பேரையிலிருக்கிறவனுக் கென்னைக் கொண்டுபோய் சீக்ரமாகக் காட்டுங்கோளென்றபடி. ௫

௬ * காதல் - அபிநிவேசமானது, எனக்கவனைக் காணவேணுமென்கிற அபிநிவேசமானதென்றபடி. கடலில் - ஸமுத்ரத்தைக்காட்டில், மிகப்பெரிது - மிகவும் பெரியதாயிருக்கிறது, ஆலென்று

ஓ— என்செயதீர்-கிம்கரிஷ்யத, அன்னைமீர்காள்-மாதர:,முன்னி அவன்வந்துவீற்றிருந்த ஸங்கல்ப்யாகத்ய தேநாத்யாஸிதே,கனிந்தபொழில்-பரிபக்வோத்யாநயுக்தே, திருப்பேரையிற்கே - திருப் பேரைதிவ்ய தேசே,காலம்பெற - காலாதிக்ரமம் விநா,சீக்ரமித்யர்த்த:. என்னைகாட்டு மினே-மாம்.ஸமர்ப்பயத ப்ரதர்சயதேத்யர்த்த: ௫

(காலம்பெறவிதி) காலம்பெறஎன்னை காட்டுமின்கள்-சீக்ரமேவமாம்ஸமீபம்ப்ராபயத,காதல் கடலில்மிகபெரிதுஆல்-மதீயோநுராக:ஸமுத்ராதப்யதிகோபவதி,அத+க்ஷம் "அபாரவிரஹஸாகரா"இதி.

ப— (என்செய்தீர்) எனக்கநர்த்தமைகளானீரல்லீர்,மீட்கத்துடங்கினதுதலைக்கட்டிற்றன்று. (அன்னைமீர்காள்)ஜந்மப்ரப்ருதியென்ப்ரக்ருதியறிந்துபோருகிறநீங்கள்மீட்கப்பார்ப்பதே.அவன்பண்ணின வுபகாரங்களை யறியாமையிறே நீங்கள் பொடிகிறது.பெற்றுவளர்த்த வுங்களுடைய வுபகாரமும் நினைக்கவேணுங்காணென்ன (முன்னியவன்) உபகாரத்தில் முற்பாடனவன் காணுங்கோள். (முன்னி) முற்பாடனாய் நின்று "ஸங்கல்ப்ய" என்னும்படியே யென்னைப்பெறுகைக் கவஸரப்ரதீக்ஷனாய்க்கொண்டு தன்வேறுபாடு தோற்றவிருக்கிற (கனிந்தவித்யாதி) கொண்டுபுக்குக் காட்டுவார் தாழ்வே, அங்குள்ளதெல்லாம் பக்வமாயிருக்கும். கனிந்தமாங்கண்டால் சுவாராவேசமுண்டு என்று அஞ்சவேண்டாத சோலை (காலம்பெறவித்யாதி) இக்குடிக்கு மெனக்கும் பரிஹாரமொன்றேயிறே. பின்னையு மென்னையங்கேகொண்டுபோய்ப் பரிஹரிக்கை தவிரிகோள்; நானுளேனாணபோதே அத்தைச்செய்யப் பாருங்கோள். பின்னை மதேஜதே வ்ருதவம்யமாகாமே, நான் ஜீவிக்குமெல்லையிலே காட்டுங்கோள். கன்றெறிந்த உதேத்தக்ஷம்"கநிஷ்ப்ரஹதே"தி. ௬

ஆறும்பாட்டில், இனிஎனக்கிங்குத்தரிப்பதரிது,ஈண்டெனவென்னைத்தென்றிருப்பேரையிலேகொடுபுக்கு மகரநெடுங் குழைக்காதனைக் காட்டுங்கோ ளென்கிறாள். (காலம்பெறவித்யாதி) இதுக்குப்பரிஹாரமிதல்லதில்லை, இனி யென்மேல் குற்றமில்லை, இப்படி கடுக வேண்டுவானே னென்னில் (காதல்) இக்காத

மூ — மடல்வாழையீன்கனிசூழ்ந்துமணங்கமழ்ந்து* புல்லிலைத்தெங்கினூடுகாலுலவுந்தண்டிருப்புலியூர்*
மல்லலஞ்செல்வக்கண்ணன்றாளடைந்தாளிம்மடவரலே* ||எ||
மடவரலன்னைமீர்கட்கென்சொல்லிச் சொல்லுகேன்மல்லைச்செல்வ* வடமொழிமறைவாணர்வேள்வியுள்

ஆ—அடங்காமை அவனூரில் ஸ்தாவரங்களிலுங்கூட வெள்ளங்கோத்து அவையும் பரஸ்பரஸம்ஶ்லேஷபரராய் நிற்கும்படியைப்பேசுகிற இவனுடைய ப்ரணயித்வவெள்ளத்திலேயிறே இவள் புகுந்திற்றென்கிறாள். ||எ||
(மடவரல்) ப்ரணயஸல்லாபம்போலே வ்ருத்தவ்ருத்தியுமுண்டாகவேணுமிறேயென்ன, அவன் வ்ருத்தவ்ருத்தி நிற்கும்படி பார்க்கலாகாதோ, மிக்கிருந்துள்ள ஸம்பத்தையுடையவரான வடமொழிமறைவாணர்

இ— இவ்வழகு விலக்ஷணஸ்வபாவஸித்தமென்றே சொல்லவேணுமென்றபடி. பாஹ்யபத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தன்பக்கல் அடங்காமையித்ருஷ்டியால) தாதீயவாக்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவனுடைய ப்ரணயித்வ த்ருஷ்டியால்) ||எ||

✳ எட்டாம்பாட்டு. ✳

‘அருமாயன்பேரன்றிப்பேச்சிலள்’’ என்று முதற்பாட்டிற்சொன்ன வ்ருத்தத்தையே ‘‘நாமமல்லால்’’ உத்தரார்த்தத்திலே இப்பாட்டிலுஞ்சொல்லுகிறதாகையாலே இது புநருக்தியன்றோவென்ன இதுக்குத் தாத்பர்யஞ் சொல்லுகைக்காக வ்யக்திப்பிக்கிறார் (ப்ரணய த்ருஷ்டியால) மல்லைச்செல்வவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவன்வ்ருத்தவ்ருத்தி த்ருஷ்டியால்) மறைக்குமென்றது க்ரியாபதமன்று, திருப்புலியூருக்கு விஶேஷணம், மறைக்கும்படியிருக்கிற திருப்புலியூரென்று ஸம்பந்திக்கிறது. அவனூர் வைதிகஸம்பந்

ஈ—விஶேஷம். மடல்- பார்ஶ்வதளங்களையும் உடையவையான, கோமலஸ்வபாவமான அம்ஸ்தாநங்களுக்கு ஶிஶிரோபசாரமாம்படி ஸவிஸ்தாரவ்யாகரணபரிசர்யாபரிஜநங்கள்போலே ஸுகந்திஶால வஸ்த்ரங்களையும் ரத்நதாலவ்ருந்தசாமரங்களாய் ப்ரஸாதிகள்போலே பூமடலையும் தரித்துக்கொண்டு நிற்குமவையா னவென்று வ்யுத்பத்தி. வாழை- கதலிகளுடைய, ஈம்- இனியவையான, நிரதிஶயபோக்யங்களான வென்றபடி. கனி- பழங்களை, சூழ்ந்து- வ்யாபித்து, மணங்கமழ்ந்து- அதனாலே வாஸித்து, மணம்- வாஸம், கமழ்கை- வாஸிக்கை, மணங்கமழ்ந்தென்று ஓதநவாக்ய வ்யதீதிவத்ப்ரயோகம். பஹு வாஸநராஶியாயென்றபடி. இதுக்கு உலவுமென்கிறதோடே அந்வயம். புல்லிலை- புல்லிக்கொண்டிருக்கிற இலைகளை யுடையவையான, புல்லுகை- தழுவுகை, ஸகிகளைப்போலே அந்த வாழைகளைத்தழுவிக்கொண்டி ருக்கிற இலைகளை யுடையவையான வென்றபடி, தெங்கினூடு- நாரிகேளதருக்களுடைய மத்யத்திலே ஊடு- மத்யம். கால- மாருதமானது, உலவும்- உலவாநிற்கிற, ஸஞ்சாரமாக ஸஞ்சரியாநிற்கிறவென்றபடி. தண்- ஶீதளமான, இப்படி ஸ்தாவரஜங்கம விஶேஷமன்றிக்கே ஸர்வத்ர ஸகலஸம்பந்தமும் ஶீதளமானவென் றபடி. திருப்புலியூர்- அந்த திவ்யநகரத்தில், மல்லல்- ஔதார்யமான, ஸம்பத்விஶேஷமானவென்றபடி. அம்- அழ கியதான, செல்வ- ஸம்பத்தையுடையவனான, கண்ணன்தாள்- க்ருஷ்ணனுடைய திருவடிகளை, இம்மடவரல- மாதுர்யஸ்வபாவையான இப்பெண்பிள்ளையானவள், மடம்- மௌக்த்யம், மடம்வருகிற த்ஶையாயிருக்கிறவள் மட வரல- மௌக்த்யஸ்வபாவையென்றபடி. அடைந்தாள்- அவனுடைய ப்ரணயித்வத்திலே ஈடுபட்டு தத்ஶரணஸக்தி யோக ஸங்கதிதைபாய்விட்டாளென்றபடி. ||எ||

அன்னைமீர்கட்கு- தாய்மார்களான உங்களுக்கு, என்சொல்லிச் சொல்லுகேன்- என்னபாசுரத்தைச்சொ ல்லி இவளுடைய வ்ருத்தத்தை அறிவிக்கக்கடவேன், ‘‘யதோவாசோநிவர்த்தந்தே’’ என்னும்படி அவாசி ஸ்ஸ்யமாகையாலே அவனுடைய வ்ருத்தத்துக்கு வாசகஶப்தமில்லையென்றபடி. ஆனாலும் அதை ஒருபா வத்தாலே வ்யஞ்ஜிப்பிக்கிறேனென்கிறாள்மேல். மல்லைச்செல்வ- ஔதார்யஸம்பத்தை உடையர்களான, மல்லை- ஔதார்யம், ஶாஸ்த்ரோக்தாநுஷ்டாந நிரவத்யவைதிகஶ்ரேஷ்டரான வென்றபடி. இது வாணருக்கு விஶே ஷணம். வடமொழி- ஸம்ஸ்க்ருதபாஷைக்கும், வடம- ஸம்ஸ்க்ருதம், மொழி- பாஷை, மறை- வேதங்களு க்கும், வாணர்- நிர்வாஹகரான ப்ராஹ்மணர்களுடைய, பாஷைக்கு நிர்வாஹகராவது:— வ்யாகரணாதிக ளிலும் மஹாவாக்யங்களிலும் அதிதீக்ஷரென்றபடி. புராணாதிகளில் ஸம்ஹிதரென்றும் சொல்லுவர். வேள் வியுள்- ஸோமயாகாதிரூப யஜ்ஞங்களிலே, வேள்வி- யஜ்ஞம். நெய்யழல்- ஆஜ்யாக்தங்களான வஹ்நி

மூ—நெய்யழல்வான்புகைபோய்த்* திடவிசும்பிலமரர்நாட்டைமறைக்குந்தண்திருப்புலியூர்ப்* படவரவணையான்றன்னாமமல்லாற்பரவாளிவளே* ॥அ॥

பரவாளிவணின்றிராப்பகற்பனிநீர்நிறக்கண்ணபிரான்* விரைவாரிசைமறைவேதியரொலிவேலையினின்றொலிப்பக்* கரவார்தடந்தொறுந்தாமரைக்கயந்தீவிகைநின்

ஆ—வேள்வியுள்நெய்யழல் வான்புகைப்போய் திடவிசும்பில் அமரர்நாட்டைமறைக்கும் நிரதிசயபோக்யமான திருப்புலியூரில் திருவனந்தாழ்வானை படுக்கையாகவுடையவனுடைய திருநாமமல்லது சொல்லுகிறிலளென்கிறாள். ॥அ॥

(பரவாளிவள்) வ்ருத்தமுண்டானாலும் தந்நாமஸங்கீர்த்தநமுண்டாகவேணுமேயென்ன? அதுவுமுண்டு, நிரதிசயபோக்யமான வ்ருத்தியையுடைய ஸாத்விகர்களுடைய அத்யயநகோஷமும், தத்ஸம்ருத்தியை

இ—ஸம்ருத்தமாகையாலே அவனுக்கு வ்ருத்தத்தைக் கேட்கவேணுமோ என்கிறாளென்றுகருத்து. தண்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரதிசயபோக்யமென்று) ॥அ॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

இரண்டாம்பாட்டிற்சொன்ன திருப்புலியூர்ஸம்ருத்தியையே வ்யதிரேகமுகேந சொல்லுகிறதாகையாலே இது வ்யாக்யாநாபேக்ஷையன்றோவென்ன வதரிப்பிக்கிறார் (வ்ருத்தமித்யாதியால்) விரைவார்என்கிறவம்சத்தை ஆச்ரயித்து அதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரதிசயேத்யாதியால்) விரைவார்என்கிறவம்சத்துக்கு அர்த்தம் ஸ்வாரஸ்யத்தாலே கண்டுகொள்வது. இசையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாத்விகேத்யாதியால்) மறைவேதியரொலியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அத்யயநேத்யாதியால)

ஶ—களுடைய, அழல்- வஹ்நி, உஜ்ஜ்வலமான ஸாரஸம். ஆஜ்யாஹுதி விசிஷ்டங்களான வஹ்நிகளுடைய வென்றபடி. வான்புகை- ப்ருவ்ருத்தமான தூமமானது, வான்- ப்ருவ்ருத்தம், போய்- ஊர்த்வலோகத்திலேபோய், திட- த்ருடமான, வ்ருஷ்ட்யாதிகளைப்போலே ப்ரதிக்ஷணவிநாசியன்றிக்கே வ்யவஸ்திதஸ்வபாவமானவென்றபடி. விசும்பில்- ஆகாசத்தில், அமரர்நாட்டை- தேவலோகத்தை, மறைக்கும்- ஆச்சாதிக்கும்படியிருக்கிற, தண்- சீதளமான, போக்யமானஎன்றபடி. திருப்புலியூர்- அந்தத்திவ்யநகரத்தில், இப்படி ஸததயாயஜூகரான வைதிகர்பக்கல் நிரவதிகப்ரீதியாலே அவ்வூரில் நித்யவாஸம்பண்ணுகிறவனை என்றபடி. இப்படியிருக்கிறயிவனுடைய வ்ருத்தத்தைச்சொல்லவேணுமோ என்றுகருத்து. படவரவு- பணாசாலியான நாமத்தை, ஸஹஸ்ரதரவதநாஷ்டநாஸம்ஸ்பர்சத்வக்ஸ்பர்ச பணாசாலியான சேஷனையென்றபடி. அணைபான்தன்- படுக்கையாகவுடையவனுடைய, அணை- படுக்கை, தன்என்றுஸ்வாமித்வம். ஸௌசீல்யத்தாலே படுக்கைஅழகையே நினைத்துச்சொல்லாநின்றாளென்றுகருத்து. நாமம்அல்லால்- திருநாமங்களையல்லது, மடவரல்- மௌக்த்யமுடையவையான, இவள்- இப்பெண்பிள்ளையானவள், பரவாள்- உச்சமாகப்பேசாள், பரவுகை- உச்சமாகப்பேசுகை, உச்சம்தப்பும்படி அத்யாஸக்தியோடே சொல்லாளென்றபடி. திருநாமத்தையே ஸவிசேஷ ஆஸக்தியோடே சொல்லாநின்றாளென்கை. ॥அ॥

விரைவார்- பரிமளம்ப்ரவஹியாநிற்கிற, விரை- பரிமளம், வார்தல்- ப்ரவஹிக்கை, நிரதிசயபோக்யமானவென்றபடி. ஸ்வயம்போக்யமான கானத்துக்குப் பரிமளஞ்சொல்லவொண்ணாதிறே. விரைவாரென்று ஸமானமானபோது- விரவிஆர்ந்ததரணவென்று பொருள், அதாவது:— எங்கும்பரவி அதிவ்யாப்தமாயிருந்துள்ள என்றபடி. இசை- கானங்களையுடைத்தான, மறை- வேதத்தினுடையவும், கானவிசிஷ்டமென்கையாலே ஸாமவேதம்விவக்ஷிதம். வேதியர்- வைதிகர்களுடையவும், அந்தவேதங்களை சீக்ஷிக்கிறவர்களுடையவும் என்றபடி, ஒலி- கோஷமானது, வேலையில்- ஸமுத்ரம்போலே, வேலை- ஸமுத்ரம், இங்கேஸமுத்ரஸாத்ருஸ்யம் அவஸாநமென்று உறையில்நிவர்த்தமும், நின்று- அவிச்சிந்நமாக, ஒலிப்ப- கோஷியாநிற்க, இததால அவன் அதிவிசாலஸன்நிதிஷ்டன்என்று ஸூசிதமாகிறது. இதற்கு மலருமெனகிறத்தோடே அந்வயம். கரவு- முதலைகளாலே, கரவு- முதலை, ஆர்- பூர்ணங்களான, இததால அப்ராக்ருதஜலஸம்ருத்தி சொல்லப்பட்டது, தடந்தொறும்- தடாகங்கள்தோறும், தாமரைக்கயம்- தாமரைஸமூஹமானது, கயம்- ஸமூஹம், தீவிகை நின்று- தீவிகைகள்போலேநின்று, நிலைவிளக்குகள்போலே அத்யுஜ்ஜ்வலங்களாய்க்கொண்டுநின்ற இடத்திலே

மூ— றலரும்* புரவார்கழனிகள்சூழ் திருப்புலியூர்புகழன்றிமற்றே* ॥கூ॥
அன்றிமற்றோருபாயமென்னிவளந்தண்டுழாய்கமழ்தல்* குன்றமாமணிமாடமாளிகைக்கோலக்குழாங்கள் மல்கித்* தென்திசைத்திலதம்புரைக்குட்டநாட்டுத்திருப்புலியூர்* நின்றமாயப்பிரான்திருவருளாமிவள் நேர்பட்டதே* ॥ய॥

ஆ— பண்ணுவார்கோஷமும் கடல்போலே கோஷியாநிற்க; முதலை மிக்க பொய்கைகள்தோறும் தாமரைகள் நிலைவிளக்கெரியுமாப்போலே மலராநிற்பதுஞ்செய்து தலைத்தரமான கழனிகளையுடைத்தாயிருக்கிற திருப்புலியூரில் பனிநீர்நிறக் கண்ணபிரானுடைய புகழன்றி மற்றொன்றும் பராவாள் இவள் நின்று இராப்பகலென்கிறாள். ॥கூ॥

(அன்றி) [illegible] ப்ரணயிகளுடைய வ்ருத்தவ்ருத்தஸம்ஜ்ஞாதாதி ஸம்பந்தவிஶிஷ்டனாயிருந்தானேயாகிலும் இந்த ப்ராப்தமான மணத்தைத்தவிர்க்கையீடல்லவென்ன; அன்றி மற்றொருபாயமென் இவளந்தண்டுழாய்கமழ்தல் என்று அவர்களுங்கூட இசைவதோரடையாளத்தைச் சொல்லிக்கொண்டு திருப்புலியூர்நின்றமாயப்பிரானோடே இவள்புணர்ந்தருளினளென்றுஞ் சொல்லுகிறாள். ॥ய॥

இ— வேலையினொலிப்பவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கடலித்யாதியால்) கரவார்தடந்தொறும் என்கிறதையருளிச்செய்கிறார் (முதலையித்யாதியால்) தாமரையித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தாமரைகளித்யாதியால்) புரவார்என்கிறதையருளிச்செய்கிறார் (தலைத்தரமானவென்று) உத்க்ருஷ்டமானவென்றபடி. ॥கூ॥

✱ பத்தாம்பாட்டு. ✱

இவளுக்கு அவனோடு ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமாயிற்றென்று கீழ்ச்சொன்னதையே பிரான்திருவருள் இத்யாதியாலே இப்பாட்டிலுஞ்சொல்லுவானேனென்ன விஶதிப்பிக்கிறார் (ஸம்ருத்யேத்யாதியால்) மணம்- விவாஹோத்ஸவம். ஈடல்லவென்றது- யோக்யமன்றென்றபடி. ஸம்ஶ்லேஷம்வ்ருத்தமாயிற்றென்று கீழேஸகி சொன்னது விவாஹார்த்தமாகையாலே தோஷாவஹமன்றென்று ஸ்வகார்யநிர்வஹணார்த்தமாகச்சொன்னது அந்ருதமென்று நினைத்து இவர்கள்இப்படி சொல்லுகிறார்களென்று கருத்து. ஆனால் இப்பாட்டில் சொல்லுகிறதும் அப்படி அந்ருதஶங்காஸங்கிதமாகையாலே அவர்களுக்கிது உத்தரமாகக்கூடுமோஎன்ன? ப்ரத்யக்ஷத்தில் விஶேஷோக்தியாலே இது ஸம்யகுத்தரமாமென்கிறார் (அவர்களுங்கூடவித்யாதியால்) ॥ய॥

ஶ— நின்றென்றபடி. அலரும்- விகஸியாநிற்கிற, இது தடாகத்துக்குவிஶேஷணம். புரவார்- அத்யுத்க்ருஷ்டங்களாயிருக்கிற, கழனிகள்- கேதாரங்களாலே, சூழ்- பரிவ்ருதமான, திருப்புலியூர்- அந்தத்திவ்யநகரத்தில், இதுக்குப் பிரானோடேயந்வயம். பனிநீர்நிற, ஶீதஜலம்போலே ஸுகுமாரமாய் ஶ்யாமளமானவர்ணத்தையுடையவனான, பனி- ஶீதம், கண்ணபிரான்- க்ருஷ்ணனாய் அவதரித்து ஸர்வோபகாரகனானவனுடைய, புகழ்அன்றி- கல்யாணகுணங்களையொழிய, மற்று- வேறொன்றை, இவள்- அவனுடைய ஸம்ஶ்லேஷத்தை அறிந்தஇவள், இராப்பகல்- நக்தந்திவம், நின்று- ஸ்திரமாய், பராவாள்- ஸ்தோத்ரமாகச்சொல்லாள், ஸ்துதியாலே அடைவுகெடச்சொல்லாளென்றபடி. ॥கூ॥

அன்றி- வக்ஷ்யமாணத்தையொழிய, அவனோடு ஸம்ஶ்லேஷித்தொழியவென்றபடி. இவள்- இந்தப்பெண்பிள்ளையானவள், அம்- அழகியதான, தண்- ஶீதளமான, துழாய்கமழ்தல்- திருத்துழாய்வாஸிக்கைக்கு, மற்றுபாயம்- வேறொருஉபாயம், என்?- எது, இது ஆக்ஷேபார்த்தம். அவனோடு ஸம்ஶ்லேஷித்ததொழிய இவளுடம்பு திருத்துழாய் வாஸிக்கைக்கு வேறொருஹேதுவில்லையென்றபடி. இது ஹேதுகர்ப்பம். ஆதலில் இவள்நேர்பட்டதாமென்று ஸம்பாவிக்கிறது. குன்றமாமணிமாடமாளிகை- கிரிஸத்ருஶங்களாய் மஹாமணிமயங்களான ப்ராகாரபவனங்களுடையவும், குன்றம்- கிரி, மாடம்- இந்தப்ராகாரம், மாளிகை- பவநம், கிரிஸத்ருஶமஹாமணிமயங்களாய் அதிஸ்வச்சரூபங்களான ப்ராகாரங்களுடையவும் பவநங்களுடையவும் என்றபடி. கோலக்குழாங்கள்- ஶோபநமானஸங்கங்கள், குழாம்- ஸங்கம், மல்கி- பஹுளமாய், தென்திசை- தக்ஷிணதிக்குக்கு, திலதம்புரை- திலகஸத்ருஶமான, புரை- ஸத்ருஶம், இது நகரத்துக்குவிஶேஷணம். குட்டநாட்டுத்திருப்புலியூர்- அந்தத்திவ்யநகரத்திலே, நின்ற- நித்யவாஸம்பண்ணுகிற, மாயப்பிரான்- ஆஶ்சர்யசேஷ்டிதனாய் உபகாரகனானவனுடைய, திருவருள்- ஸ்ரீகடாக்ஷத்தை, இவள்- இப்படி திருத்துழாய்

மூ—நேர்பட்டநிறைமூவுலகுக்குநாயகன்றன்னடிமை* நேர்பட்டதொண்டர்தொண்டர்தொண்டர்தொண்டன் சடகோபன்சொன்* நேர்பட்டதமிழ்மாலையாயிரத்துளிவைபத்தும்* நேர்பட்டாரவர்நேர்பட்டார்நெடுமாற்கடிமைசெய்யவே* ।கக॥

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

---

ஆ—(நேர்பட்ட) ஸமஸ்த ஸமஸ்தஜகந்நாதனான ஸர்வேஶ்வரனுடைய அடிமையில் நேர்பட்ட ஸர்வஶேஷபூதரான சடகோபன்சொல் நேர்பட்டதமிழ்மாலையாயிரத்துளிவைபத்தும் நேர்பட்டவர்கள் நெடுமாற்கடிமைசெய்யப்பெற்று வாழ்வரென்கிறார். ॥கக॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளேசரணம்.

---

✳ நிகமனம். ✳

இ— அடிமைநேர்பட்ட ஐஶ்வர்யத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமஸ்தவிஶேஷ்யாதியால) ஆஶ்ரிதர்த்தாலே ஸ்வாதந்த்ர்யப்ரகாஶகமான ஸர்வஜ்ஞாதிகுணங்களும் ஶேஷபூதரான தம்பக்கலவனுக்கு அநாதரமும் தம்மோடு ஸம்ஶ்லேஷரஸிகத்வமும் முதலாகக் கீழ்ச்சொன்னவை விவக்ஷிதங்கள். ஸ்ரீயாலேயென்றது இது ஸௌந்தர்யமென்றுகருத்தாலே சொன்னபடி. தொண்டரித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸமஸ்தஶேஷித்வாதிபால) ॥கக॥

---

ஶ— ஸர்வஸியாதிறகுமிவன், நேர்பட்டதாம- கிட்டினதாகவேணும், அடைத்தாளாகவேணும், இதில ஸம்ஶயமில்லையென்றபடி. ।ம॥

நிறைமூவுலகுக்கும்- ஸர்வஸம்பூர்ணங்களான த்ரிவித சேதநாசேதநங்களுக்கும், உலகு- லோகம், லோக்யதஇதி லோகஃ ஸகலஃ; க்ஷேத்ர ஸமஸ்தசேதநாசேதநங்களுக்கு மென்றபடி. நேர்பட்டநாயகன்தன்- நன்றாகவாய்த்த ஸ்வாமியுடைய, "ஸர்வலோகைகநாயகம் யேநஸ்யாஜ்ஞாயவர்த்தம்" என்கிறபடியே காம்க்ஷிதாயிகவக்ஷிப்பாய்க்கொண்டு வாய்ந்திருக்கிற ஸ்வாமியுடையவென்றபடி. நித்யமாயிருக்கிற ஸம்ஸாரஸம்பந்தத்தைக்காட்டாவிக்க ஸங்கத்தைச் சொல்லுமாப்போலே வாய்ப்பாகச்சொன்னது அவனுடைய சீர்மையையறிந்து அநுஸந்திப்பார்க்கு ப்ரதிக்ஷணம் நவநவமாய்க்கொண்டு இது உதாநிபிதாநம்போலே யிருக்குமென்னும் கருத்தாலே. தன்னன்று ஸ்வாமித்வம். அடிமைநேர்பட்ட- கைங்கர்யத்துக்குவாய்த்தவரான, இது சடகோபனுக்குவிஶேஷணம். லோகங்களுக்கு அவன் ஶேஷியாய்வாய்த்தாப்போலே அவனுக்கிவர் ஶேஷமாகவாய்த்ததுமென்றுகருத்து. தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன்- அத்தால் தாஸதாஸதாஸருக்கும் தாஸபூதரான, தொண்டர்- பக்தர், ஸமஸ்ததாஸபூதரான தாஸரென்றபடி. தாம் ஶேஷமாயிருக்கிறது அவனுக்குப்ரதிக்ஷணம் நவநவமாய்க்கொண்டு உதாநிபிவாய்த்தாப்போலே யிருக்கிறபடியைக்கண்டு ப்ரீதிஶயத்தாலே ஶேஷத்வகாஷ்டா ப்ராப்தரானவென்றபடி. சடகோபன்- ஆழ்வாருடைய, சொல- ஸூக்தியான, நேர்பட்ட- வாய்த்ததான, உதாநிபிபோலே ஜகத்துக்கெல்லாம் ஸுஸ்ரூஷமாக ஸித்ததானவென்றபடி. தமிழ்மாலை- த்ராவிடபாஷையாலே மாலைபோலே சேர்க்கப்பட்டதான, ஆயிரத்துள்- ஸஹஸ்ரத்துக்குள்ளே, இப்பத்தும்- இந்தத்ஶகத்தை, நேர்பட்டார்- கிட்டினவர்கள், அப்யஸிக்கப்பெற்றவர்களென்றபடி. அவரென்றிருக்கையாலே "யவர்" என்றொருபதம் அத்யாஹார்யம். யவர்நேர்பட்டார்? அவர்என்றபடி. ஜாதிகுணாதிவைஷம்யம் இதில அப்ரயோஜகமென்றென்று கருத்து. யதா:- நேர்பட்டாரவர்என்று ஸம்பந்தமாய் அந்வயித்தஜநங்களென்றபடி. நெடுமாற்கு- ஆஶ்ரிதவிஷயத்தில் தீவ்ரவ்யாமோஹத்தையுடையவனான ஸர்வேஶ்வரனுக்கு, மால்- வ்யாமோஹம், அடிமைசெய்யநேர்பட்டார்- கைங்கர்யம் பண்ணுகைக்கு வாய்த்தவர்கள், அவனுக்கு ஆஶ்ரிதவாத்ஸல்யம்போலே ப்ரியாயகராய்க்கொண்டு அடிமைசெய்யப்பெறுவரென்றபடி. ॥கக॥

ஜ்ஞாநவைராக்யநிஷ்டாநஶாலி ஸ்ரீஶைலநாதார்ய ஜாமாத்ருமஹாமுநிகுருவே நமஃ.

ஸ்ரீ:

த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:

(கருமாணிக்கமலைமேல்.)

வைலக்ஷண்யாத்ஸ்வாதுமூர்த்தே: உத்கடோத்தமஹாரஹேமபூஷிதத்வாத்
ஸாஹஸ்ராநேகாயுதத்வாத் ப்ரளயஸவிதயா ஜீவநேகஷ்டத்வாத் |
ஸவ்யக்ஷாத்ருஷ்ட்யா ஸம்பந்நிரவதிகதயா ஸ்ருத்யந்தவேத்யபாவாத்
நிஷ்டாம் தாஸ்யே ஸ்வகீயே ப்ரகடயதி ஹரிஸ்த்வத்யாஜ்ஞாயிநே ந ||௮0||

(வைலக்ஷண்யாத்ஸ்வாதுமூர்த்தே:) கருமாணிக்கமலைமேலித்யாதி- நிரதிசயஸௌந்தர்யலாவண்யாதி திவ்யாவயவங்களையுடைய திருமேனியை யுடையவனாகையாலும், (உத்கடோத்தமஹாரஹேமபூஷிதத்வாத்) மின்னுநீண்முடியாயிரத்யாதி- தீப்திமத்துக்களாயிருக்கிற திருவபிஷேகம்முதலான திருவாபரணங்களாலே அலங்க்ருதனாயிருக்கையாலும், (ஸாஹஸ்ராநேகாயுதத்வாத்) செழுங்கதிராழிமுதலித்யாதி- மிக்கதேஜஸ்ஸையுடைய திருவாழிமுதலான திவ்யாயுதங்களை யுடையவனாகையாலும், (ப்ரளயஸவிதயா) மூவுலகுண்டுமிழ்தேவபிரான்- ப்ரளயகாலத்திலே ஸகலலோகங்களையும் வயிற்றிலேவைத்து ஸவாவைப்போலே ரக்ஷிக்குமவனாகையாலும், (உஜ்ஜீவநேகஷ்டத்வாத்) முனிவன்மூவுலகாளியப்பன்- ஜகத்ரக்ஷணநிர்வாஹகனாய் தஜ்ஜீவநத்திலே க்ருஷிபண்ணுமவனாகையாலும், (ஸவ்யக்ஷாத்ருஷ்ட்யா) செழுநீர்நிறக்கண்ணபிரான்- க்ருஷ்ணனாய் அவதரித்து ஆஸ்ரிதருக்கு ஸுலபனாயிருக்கையாலும், மேல் எட்டாம்பாட்டிற்சொல்லுகிற அநுஸந்தானமும் இங்கு அபிப்ரேதம். படவரவணையான்- திருவனந்தாழ்வானைத் திருப்படுக்கையாக உடையவனாகையாலும, இங்கே க்ருபாவிவக்ஷிதமன்று. (ஸம்பந்நிரவதிகதயா) மல்லலஞ்செல்வக்கண்ணன் நிரவதிகைஸ்வர்யத்தை யுடையவனாகையாலும், விரைவாரிசைமறைவித்யாதி- அவ்வூரில்வர்த்திக்கிற ப்ராஹ்மணர்களெல்லோரும் வேதார்த்தங்களை விசாரித்துக்கொண்டு வைதிகங்களான யாகாதிகளை அநுஷ்டிக்கும்படி அத்ருஷ்டிஷ்டனாயிருக்கையாலும், ஆறும்பாட்டின் முதலடியிலே செழுநீர்நிறக் கண்ணபிரானென்று ஸவ்யக்ஷமும் மேலடியிலே ஸ்தாவராதிகளுக்குமுட்பட ஆஸ்ரயணம்பண்ணுகையாகிற உபேதாதாரகமும் அநாயோசிதவிசேஷாவிசேஷ லோகஸாரண்யமுஞ் சொல்லுகிறதாகையாலே இவையேயிங்கு அபிப்ரேதம். எட்டாம்பாட்டில் வேள்வியுள்நெய்யழல் என்று வைதிகஸம்பத்தும் விரைவாரிசைமறையென்று வேதார்த்தஜ்ஞாநஸம்பத்தும் நிரவதிகமென்னப்பட்டதென்று பதினெண்ணாயிரம் (ஸ்ருத்யந்தவேத்யபாவாத்) நின்றமாயப்பிரான்- ஆஸ்சர்யங்களான வ்யாபாரங்களை யுடையவனாகையாலும், திருப்புலியூரில் எம்பெருமான் சேதநருக்கு ஸ்வகீயதாஸ்யத்திலே நிஷ்டையை ப்ரகடீகரிப்பாநிற்கிறானென்று "கருமாணிக்கமலைமேல்" என்கிறதசகத்திலே காரிஸூநுவாலே அநுபவித்தருளப்பட்டதென்கிறார். ||௮0||

ஸ்ரீமதேநிகமாந்தமஹாதேசிகாய நம:.

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

# எட்டாம்பத்தில் ஒன்பதாந்திருவாய் மொழிமுற்றிற்று.

# பத்தாந்திருவாய்மொழி.

மூ— நெடுமாற்கடிமைசெய்வேன்போலவனைக்கருதவஞ்சித்துத்* தடுமாற்றற்றதீக்கதிகண்முற்றுந்தவிர்ந்த சதிர்நினைந்தாற்* கொடுமாவினையே

ஆ— (நெடுமாற்கடிமை) இப்படியெம்பெருமான் தம்மை ஸம்ச்லேஷமாம்படி அடிமைகொண்டபடியை அநுஸந்தித்து மிகவும்ப்ரீதராய் அந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே அவ்வளவில்பர்யவஸியாதே அவனுடைய ஸௌந்தர்யசீலாதிகளிலே யீடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சேஷமாகையாலே நிரதிசயபுருஷார்த்தமென்று அத்யவஸித்து தத்ஸம்பந்திகளாய் ஸர்வேச்வரஸம்பந்தமான ஸகலபுருஷார்த்தங்களும் தனித்தனியும் திரளவும் இப்பாகவதசேஷத்வ புருஷார்த்தத்தோ டொவ்வாதென்கிறார். ஆச்ரிதர் பக்கல் வ்யாமோஹத்தையுடைய வெம்பெருமான்தனக்கு அடிமைசெய்கையில் எனக்குள்ள ஐஹார்த்தமே.

பத்தாந்திருவாய்மொழி.

இ— இப்படிஸம்ச்லேஷத்திலே மிகவும்ப்ரவணராநின்ற ஆழ்வார் அதைவிட்டு பாகவதசேஷத்வத்தை இத்திருவாய்மொழியிலே அநுபவிக்கிற இது அஸங்கதமன்றோவென்ன ஸங்கதிப்பிக்கிறார் (இப்படியித்யாதியால்) ப்ரகர்ஷத்தாலே என்கிறதற்கு அத்யவஸித்துஎன்கிறத்தோடே அந்வயம். அவ்வளவில் பர்யவஸியாதே என்கிறவித்தாலே பாகவதசேஷத்வம் பகவச்சேஷத்வகாஷ்டையென்று பர்யவஸிக்கையாலே ஸ்வாநுரூபகாஷ்டாப்ராப்தமென்கிற பகவத்ஸங்கணம் இத்திருவாய்மொழிக்கு வ்யாக்யானமென்று ஸூசிதமாகிறது. ஸர்வேச்வரஸம்பந்தமான என்றது- ஆறும்பாட்டை நினைத்துச்சொன்னபடி. ஒவ்வாதென்றது- ஸத்ருசமாகமாட்டாதென்றபடி. இத்தால் பயிலும்சுடரொளியில் பாகவதசேஷத்வம் இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபாநுபந்தியாக உளதென்கிறார். இத்திருவாய்மொழியில் பாகவதசேஷத்வமே நிரதிசயபுருஷார்த்தமென்கிறாரென்றதாயிற்று. *

முதற்பாட்டு.

நெடுமாற்கென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆச்ரிதரித்யாதியால்) அடிமைசெய்வேன்போல் அவனைக்கருதஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அடிமையித்யாதியால்) காரணமாகஎன்கிறதற்குப்

ஸ— நெடுமாற்கு- ஆச்ரிதவிஷயத்தில் தீவ்ரமான வ்யாமோஹத்தையுடைய ஸர்வேச்வரனுக்கு, மால்- வ்யாமோஹம், தன்னளவேயன்றிக்கே அடியார்களுக்குங்கூட என்னையாள்படுத்தும்படியான வ்யாமோஹத்தையுடைய ஸ்வாமிக்குஎன்றபடி. அடிமைசெய்வேன்போல்- அடிமைபுகுகிறவன்போலே, போல்என்கிறதால் அது உத்தேச்யமென்றுகருத்து, அவனைக்கருத- அவனை உபாஸ்யத்வேன த்யானித்திலேயே, இதற்குத் தவிர்ந்த என்கிறத்தோடே அந்வயம். தடுமாற்றற்ற- தடுமாறுகையன்றிக்கே யிருந்துள்ள, தடுமாறுகை- வ்யாகுலபாவம், மோக்ஷார்த்த ஸாத்யத்வமுமில்லாமையாலே நிஸ்ஸந்தேஹமாக அப்ராக்ருதங்களாயிருந்துள்ள என்றபடி. தீ- அநிஷ்டங்களான, அதிகோரதுர்விஷயங்களான என்றபடி. கதிகள்- கதிகள், ஜந்மமரணாதி ஸாம்ஸாரிகக்லேசங்களென்றபடி. முற்றும் க்ருத்ஸ்நமும், தங்களுக்கு ஹேதுவான அவித்யாவாஸநா ருசிகளோடேகூட என்றபடி. வஞ்சித்து- வஞ்சித்து, கள்ளரோடிப்போமாபோலே தாங்கள்போனபடி ஒருவருக்குந்தெரியாதே என்றபடி. தவிர்ந்த- நிவ்ருத்தங்களாயிற்றன, இது ஹேதுகர்மம், ஆதலால் அவனடியாரடியே கூடுமிதுவல்லால் என்றந்வயிக்கிறது. சதிர்நினைந்தால்- உசிதத்தைப் பார்த்தால், சதிர்- உசிதம், இவ்வாத்மஸ்வரூபத்துக்கு உசிதமான புருஷார்த்தத்தை நிரூபித்துப்பார்த்தாலென்றபடி. அவனடியாரடியே - ஆச்ரிதவத்ஸலனான அவனுக்கு தாஸராயிருக்கிறவர்களுடைய திருவடிகளையே, அவதாரணத்தாலே பாகவதசேஷத்வமே யெனக்கு புருஷார்த்தமல்லது அவர்களோடு ஸாதர்ம்யாதிகள் ஹேயமென்றபடி. கூடுமிதுவல்லால்- அடைகையாகிற இப்புருஷார்த்தமொழிய, வியன்மூவுலகு- விஸ்மயநீயமான த்ரைலோக்யத்தை, நாநாவிதஸௌந்தர்ய ஸம்ருத்தயா ஆச்சர்யபூதமான த்ரைலோக்யைச்வர்யத்தையென்றபடி. வியன்- விஸ்மயநீயம், பெறினும்- பெற்றாலும், பெறிலும்என்கிறவிடத்தில் லகாரத்துக்கு எதிர்நிகழ்கழிவினும் என்கிறவிடத்தில்போலே னகாராதேசம், கொடுமாவினையேன்.

மூ—னவனடியாரடியேகூடுமிதுவல்லால்* விடுமாறென்பதென்னந்தோ வியன்மூவுலகுபெறினுமே* ௧
வியன்மூவுலகுபெறினும்போய்த் தானேதானேயானாலும்* புயன்மேகம்போற்றிருமேனியம்மான்புனைபூங்
கழலடிக்கீழ்ச்* சயமேயடிமைதலைநின்றார்திருத்தாள்வணங்கி

ஆ—காரணமாகப்பதற்ற மற்றுநின்றநலிகிற ஸாம்ஸாரிக துக்கங்களையெல்லாம் போனபடி தெரி
யாமேபோக்கி யென்னையடிமைசெய்வித்துக்கொண்டருளின இவனடியாரடியே கூடுமிதுவல்லது விலபநீய
மான த்ரைலோக்யம்பெறினும் அல்லேனென்கிறார். ௧
(வியன்மூவுலகு) சிறப்புடைய ஐஶ்வர்யஸாம்ராஜ்யம்பெறினும்- கைவல்யாநுபவம்பண்ணப்
பெற்றாலும் வர்ஷுகவலாஹகம்போலே இருக்கிறவடிவையுடைய ஸர்வேஶ்வரனுடைய நிரதிஶய

---

இ—போக்கியென்கிறத்தோடே அந்வயம். தடுமாற்றற்ற என்கிறதையுரைக்கிறார் (பதற்றமற்றுஎன்று) பதறுகையி
ல்லாமலென்றபடி. பதற்றம்- பதறுகை, ஸ்திரமாயிருந்துகொண்டென்கை. தீக்கதிகள்முற்றும்என்கிறதற்கு
த் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நலிகிறவித்யாதியால்) வஞ்சித்துத்தவிர்ந்த என்றநுவதித்துத் தாத்பர்யமருளிச்செ
ய்கிறார் (போனபடியித்யாதியால்) இதில் ஹேதுவருளிச்செய்கிறார் (என்னையித்யாதியால்) வியன் என்
கிறதையுரைக்கிறார் (விலபநீயமானவென்று) விடுமாறென்பதென் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்
கிறார் (அல்லன்என்று) மாட்டேனென்றபடி. அந்தோ அநுகம்பிதேனென்கை. ௧

## ✳ இரண்டாம்பாட்டு. ✳

வியன்ஶப்தத்தையுரைக்கிறார் (சிறப்புடையஎன்று) சிறப்பு- வைலக்ஷண்யம், போய்த்தானேதானேயா
னாலும்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (கைவல்யேத்யாதியால்) இத்தால் கீழ்ப்பாட்டிலே பாகவத
ஶேஷத்வத்துக்கு ஐஶ்வர்யம் ஸத்ருஶமன்றென்றவர் இப்பாட்டிலே ஐஶ்வர்யகைவல்யங்கள் இரண்டு
ங்கூடினாலும் இதுக்கு ஸத்ருஶமன்றென்கிறாரென்று ஸங்கதி ஸூசிதை. புயல்ஶப்தத்தையுரைக்கிறார்
(வர்ஷுகஎன்று) புனையித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நிரதிஶயேத்யாதியால்) இம்மையே

---

ஸ—க்ரூரங்களான பாபங்களையுடையவனான நான், கொடு- க்ரூரம், ஐஶ்வர்யம் அதிக்ஷுத்ரமா
யிருக்க அது பாகவதஶேஷத்வஸாம்ராஜ்யத்துக்கு ஸத்ருஶமன்றென்று ப்ரதிஷேதிக்கவேண்டும்படி
அதுக்கு இத்தோடே ஸாத்ருஶ்யப்ரஸங்கமுண்டாவதே என்கிற நிர்வேதத்தாலே கொடுமாவினையேனென்கிறார்.
விடுமாறென்பது- அந்தஐஶ்வர்யத்தை அநுபவிக்கைக்காக இந்த பாகவதஶேஷத்வத்தைவிடும் ப்ரகார
மென்கிறது, ஆறு- ப்ரகாரம், என்- ஏது, ஒன்றுமில்லையென்றபடி. அந்த ஐஶ்வர்யத்தையே பரித்யஜிப்
பனல்லது இந்தபாகவதஶேஷத்வஸாம்ராஜ்யத்தை விடேனென்கை, அந்தஐஶ்வர்யம் கோ
டிகலாம்ஶத்தாலும் இங்கு ஸாத்ருஶ்யமன்றென்றுகருத்து, அந்தோ- அய்யோ! இதைவிடுவன் என்னும்ப்ரஸங் ௧
கந்தானுமுண்டாவதேயென்று விஷண்ணாகிறபடி.
வியன்- விஸ்தீர்ணமான, பரிபூர்ணமான வென்றபடி. மூவுலகு- த்ரைலோக்யத்தை,
பெறினும்- பெற்றாலும், போய்- வைஷயிகஸுகங்களில் ஸங்கமற்றுப்போய், தானேயானாலும்- ஸ்வஸ்வரூ
பதிரோதாயக ப்ரக்ருதிஸம்பந்தவிஶேஷம் கழிந்து ஶுத்தஸ்வரூபனான தான் ஏகமேயாய் பரமா
த்மாநுபவமின்றிக்கே ஸாக்ஷாத்க்ருத ஸ்வஸ்வரூபனான தானேயானாலும், கைவல்யாநுபவம் பெற்
றாலுமென்றபடி. தானேதானே யென்கிற அவதாரணத்தாலே ஸ்வஸ்வரூபதிரோதாயக த்ரிகுண
ஸம்பந்தங்களும் த்ரிகுணஸம்பந்தவிஶேஷமும் பரமாத்மாநுபவம் க்ரமேண வ்யவச்சேத்யங்கள். ஐஶ்வ
ர்யகைவல்யங்கள் இரண்டுங்கூடினாலுமென்று பதத்தாத்பர்யம். இதுக்கு உறுமோஎன்கிறதோடே அந்வயம்.
புயல்- வர்ஷுகமான, மேகம்போல்திருமேனி- ஜைவம்போலேயிருக்கிற திவ்யமங்களவிக்ரஹத்தை
யுடையவனான, அம்மான்- ஸ்வாமியுடைய, புனைபூங்கழல்- புனையப்பட்ட பூஷணங்களையும் கழல்களையுமுடை
யவையான, புனைகை- தொடுகை, கழல்- வீரகடகம். பூஷணங்களாலும் வீரகடகங்களாலும் அலங்
க்ருதங்களானவென்றபடி. அடிக்கீழ்- திருவடிகளின்கீழே, சயமே யடிமை- ஸ்வயமாயே இருக்கிற அடிமை
யையுடைய, சயம்- ஸ்வயம். ஸ்வயம்ப்ரயோஜநமாயிருக்கிற கைங்கர்யத்தினுடைய என்றபடி. தலை-
தலையிலே பரிபூர்ணகைங்கர்யத்திலே யென்று பதார்த்தம். நின்றார்- நிஷ்டையையுடையவர்கள்

மூ— இம்மையே* பயனேயின்பம்யான்பெற்றது றுமோபாவியேனுக்கே* ॥௨॥

உறுமோபாவியேனுக் கிவ்வுலகமூன்று முடனிறையச்* சிறுமாமேனி நிமிர்ந்த செஞ்சந்தாமரைக்கட்டிருக்குறளன்* நறுமாவிரைநாண்மல

---

ஆ— ஶேஷபூதமான திருவடிக்கீழே சயமேபடிமை தலைநின்றார் திருத்தாள்வணங்கி இந்தலோகத்திலே நான் பெற்ற ஸாக்ஷாத்காராநுபவத்துக்கொக்குமோ, இவைசொல்லவேண்டிற்றென்னும் வெறுத்தாலே "பாவியேன்" என்கிறார். ॥௨॥

(உறுமோபாவியேனுக்கு) வடிவுசிறுத்து ஸாத்விகஸத்வங்களையுடையராய் என்னை அடிமைகொண்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் இங்கேதிரிய அவர்களைத்தவிர்ந்து இவ்வுலகமூன்றுமுடன்நிறையச்சிறுமாமேனி நிமிர்த்தருளின

---

ஈ— யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இந்தலோகத்திலேயென்று) பயனேயின்பமென்கிறதை யுரைக்கிறார் (ஸாக்ஷாத்காராதியால்) பரமபதத்திலே போனபின்பன்றிக்கே இந்தலோகத்திலேதானே நான்பெற்ற ஸாக்ஷாத்காராநுபவமான என்றபடி. "ஸம்ஸாரவிஷவ்ருக்ஷஸ்ய த்வேஏவாம்ருதோபமே । கதாசித்கேஶவேபக்திஸ் தத்பக்தைர்வாஸமாகம:" என்றதிறே. ॥௨॥

✳ மூன்றாம்பாட்டு. ✳

சிறுமாமனிசர்என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (வடிவுஇத்யாதியால்) வடிவுக்குச்சிறுமையாவது ஜகத்ரக்ஷணஸஜாதீயமாயிருக்கை. அன்றிஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவர்களைத்தவிர்ந்துஎன்று) நாட்பூ- அபிநவபுஷ்பம், திருவடிகீழ்புகுகையென்கிறது மோக்ஷப்ராப்தத்தைச்சொன்னபடி.

---

ப— பாகவதர்களுடைய, திருத்தாள்- ஸ்ரீபாதங்களை, வணங்கி- ப்ரணாமம்பண்ணி, இம்மையே- இந்த ஶரீரத்திலேதானே, மை- ஶரீரம். யான்பெற்றது- நான்பெற்றதான, ஶரீராநந்தரமின்றிக்கே இந்த ஶரீரத்திலேதானே நான்பெற்றதான என்று தாத்பர்யம். பயனே- ஸமமேயாயிருக்கிற; அவதாரணத்தாலே ஸாத்யஸம்பந்தவ்யாவ்ருத்தியும். எனக்கு ஸாதநமாயிருக்கையன்றிக்கே ஸ்வயமேவ ப்ரயோஜநமாயிருக்கிற வென்றபடி. பாகவதர்கள்திருவடிகளை வணங்கி ஆநந்திக்கிறவிது "ஸாதநம் பகவத்ப்ராப்தௌ ஸ ஏவாசார்யஸேவநம்" என்கிறபடியே சிலருக்கு ஸாதநமாகவற்றாகிலும் எனக்கு ஸ்வயமேவ ப்ரயோஜநமாயிருக்கிறதென்றுகருத்து. இன்பம்- ஆநந்தத்தை, பாவியேனுக்கு- பாபியானவெனக்கு, உறுமோ- ஸமானமாகச்சேருமோ, அந்த ஐஶ்வர்யமும் கைவல்யமும் கிமுத விஶேஷ:. என்பதுக்கு அந்த ஐஶ்வர்யகைவல்யங்கள் பாகவதபரிசரணாநந்தத்துக்கு ஸத்ருஶமாகமாட்டாதென்று பரம தாத்பர்யம். ஸம்ஸாரிகன் வஸிஷ்டனுக்கு ஸத்ருஶனன்றென்று சொல்லுமாப்போலே இப்படி ப்ரஸஜ்ய ப்ரதிஷேதம் தமக்கு உத்ஸாஹமாயிருக்கையாலே தம்மைப்பாவியாக வெறுக்கிறார். ॥௨॥

சிறுமாமனிசராய்- சிறிய ஶரீரவிஶேஷர்களாய், மனிசர்- மநுஷ்யர், ஜகத்ரக்ஷண ஸஜாதீய விக்ரஹவிஶிஷ்டதயா சிறியவர்களாய் ப்ரபாவங்களாலே நித்யஸூரிகளிற்காட்டில் ஶ்ரேஷ்ட ஶரீரவிஶேஷர்களாயென்றபடி. என்னையாண்டார்- தங்களுடைய இந்த பரகதஸ்வரூப குணங்களாலே என்னையடிமைகொண்டவர்களான, அவனடியார்- அவனுக்கு அடிமையாயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள், இங்கே திரிய- இந்த லோகத்திலே வஸிப்பாகிறக்கச்செய்தே, அன்றி- அதன்றியே, அவர்களுக்கு இங்கே அடிமையாயிருக்கிற வதல்லதென்றபடி. இதுக்கு உறுமோ என்கிறதோடே அந்வயம். இவ்வுலகமூன்றும்- தன்னுடைய வைலக்ஷண்யங்களை யறியமாட்டாத இந்தலோகத்ரயமும், உடன்- கூட, யுகபதேவ என்றபடி. நிறைய- வ்யாப்தமாம்படி, இதுக்கு நிமிர்ந்த என்கிறதோடே அந்வயம். சிறு- சிறியதான, பால்ய ஸம்ஸ்த்தாநியான என்றபடி. மா- ஶ்ரேஷ்டமான, ஸௌந்தர்யலாவண்யங்களாலே அதிஶயிதமான என்றபடி. மேனி- திருமேனியை, நிமிர்ந்த- உந்நதமாக்கினவனான, த்ரிவிக்ரமரூபேண வளரும்படி பண்ணினவனான என்றபடி. என்- என்னுடையவனான, எனக்கு ஶேஷியானவென்றபடி. செந்தாமரைக்கண்ணன்- அருணதாமரஸவிலோசநனான, கண்திரு என்கிறவிடத்தில் ணகாரஸ்ய தகாரேவர்ணே உபயோ: டகாராதேஶ:. திருக்குறளன்- ஸ்ரீவாமநனுடைய, இதுக்கு அடியென்கிறதோடே அந்வயம். நறு- நல்லதான, மாவிரை- ஶ்ரேஷ்டபரிமளத்தையுடையதான, விரை- பரிமளம். நாண்மலர்- அபிநவபுஷ்பம்போலேயிருக்கிற, நாண்- அபிநவம்

மூ—புகழ்மேல் முழுதுமே.* ||௫||

நுகர்ச்சியுறுமோமூவுலகின்வீடுபேறுதன்கேழில்* புகர்ச்செம்முகத்தகளிறட்டபொன்னாழிக்கையென்னம் மான்* நிகர்ச்செம்பங்கியெரிவிழிகணீண்டவசுரருயிரெல்லாம்* தகர்த்துண்டுழலும்புட்பாகன்பெரியதனி மாப்புகழே* ||௬||

ஆ—மோக்ஷந்தான் இங்கே திருவாய்மொழியைக்கொண்டு எம்பெருமானை அநுபவித்தால வரும் ப்ரீதிக்குப் போருமோஎன்கிறார். ||௬||

(நுகர்ச்சி) ஸம்ஸாரநிவ்ருத்திபூர்வக பகவதநுபவப்ராப்தியும் ஸாயுஜ்யநாவிஶேஷ பகவதநுபவமும் கூடினலதான் திருவாய்மொழியாலே எம்பெருமானை அநுபவித்தாலுள்ள ப்ரீதிக்குப்போருமோஎன்கிறார். ||௬||

இ—ச்செய்கிறார் (அந்தஸம்ஸாரேத்யாதியால்) தன்சேரித்யாதிகருத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இங்கேதிரு வாய்மொழியித்யாதியால்) போருமோ என்றது- ஸத்ருஶமோ என்றபடி. இழிபட்டோடுமுடலினில் பிறந்து என்கிறதின் அர்த்தம் விரோதிபூர்வேத்யாதியாலே ஸங்க்ருஹீதம். ஸம்ஸாரம் பகவதநுபவப்ரீதிக்கு விரோதியேயாகிலும் திருவாய்மொழியாகிற த்ருப்தஸஞ்ஜீவிநியாலே ஸ்ரீவைகுண்டத்தில் பிறக்கும்ப்ரீதி இங்கே உண்டாகக்கூடும், ஆகையால் இக்குற்ற பகவதநுபவகைங்கர்யமே நிரதிஶயபுருஷார்த்தமென்கிறா ரென்றுகருத்து. ||௬||

✳ ஆறாம்பாட்டு ✳

வீடுமூவுலகின்பேறு என்றந்வயித்து இதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஸாரேத்யாதியால்) நு கர்ச்சியுறுமோஎன்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (திருவாய்மொழியாலேயித்யாதியால்) கூடினால்தான்

ஈ—சேருமோ, அதுக்கு ஸத்ருஶமாகமாட்டுமோ என்றபடி. ||௬||

தன்கேழில- தனக்கு ஸத்ருஶமில்லாததான, கேழ்- ஸத்ருஶம். நிருபமஸ்வரூபமான வென்றபடி. புகர்ச்செம்முகத்த- புகரையும் சிவந்தமுகத்தையும் உடைத்தான, புகர்- தேஜஸ்ஸு, உத்தேஜக ஸமுஜ்ஜ்வலிதமான ஔஜ்ஜ்வல்யத்தையும் க்ரோதவேகத்தாலே சிவந்த ரூபத்தையுமுடையதான வென்றபடி. களிறு- கஜத்தை, குவலயாபீடத்தை யென்றபடி. அட்ட- அழித்ததான, ஸம்ஹாரம்பண்ணினதான வென்றபடி. பொன்னாழிக்கை- ஸ்வர்ணமயங்களான அங்குலீயகங்களை உடைத்தான திருக்கையை யுடையவனை, ஆழி- அங்குலீயகம். குவலயாபீடத்தை வதத்திலே அடித்தபோது கையும் திருவாழிமோதிரமு மாயிருந்த அழகைச்சொன்னபடி. என்னம்மான்- கையும் திருவாழிமோதிரமுமான அழகைக்காட்டி என்னை வஶீகரித்த ஸ்வாமியான, நிகர்- அநுரூபமான, அஸுரஜாதிக் கநுரூபமான என்றபடி. செம்- சிவந்ததான, அருணவர்ணமான வென்றபடி. பங்கி- முன்னும்பின்னும்தொங்குகிற கேஶங்களை யுடையவர் களான, பங்கி- தொங்குகிறமயிர். எரிவிழிகள்- ஜ்வலநஸத்ருஶ நேத்ரங்களான, நீண்ட- அதிதீர்க்கஶரீ ரான, அசுரருயிரெல்லாம்- அஸுரர்களுடைய ப்ராணன்களையெல்லாம், - தகர்த்து- பீடித்து, உண்டு- க்ரஸித்து, நிஶ்ஶேஷமாக நஶிப்பித்தென்றபடி. உழலும்- இதுவேயாத்ரையாய் ஸஞ்சரியாநிற்கிற, புள்- பக்ஷிக்கு, வைநதேயனுக்கென்றபடி. பாகன்- நியந்தாவான ஸர்வேஶ்வரனுடைய, பாகன்- நியந்தா, பெ ரிய- அபரிச்சிந்நமான, தனி- அத்விதீயமான, மா- மஹத்தான, நிரதிஶயமஹத்வமான என்றபடி. புகழ்- கல்யாணகுணங்களை, நுகர்ச்சி- அநுபவிக்கை, திருவாய்மொழியாலே அநுபவிக்கையையென்றபடி. வீ டு- மோக்ஷமும். மூவுலகின்- த்ரைலோக்யத்தினுடைய, பேறு- பெறுகையும், ஐஶ்வர்யமுமென்றபடி. ஸர்வ லோகைஶ்வர்யபூர்வ ஸர்வேஶ்வரஸமவைபவமுமென்கை, உறுமோ?- அநுரூபமாகச்சேருமோ, அத ன்நுகர்ச்சி ஸத்ருஶமாகமாட்டுமோஎன்றபடி. இப்பாட்டை பகவதநுபவகைங்கர்யப்ரகர்ஷ பரமாகயோஜி க்கும்போது நுகர்ச்சியென்கிறபதத்துக்கு ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உகப்பாம்படியாகத் திருவாய்மொழிபாடி அநுபவிக்கையென்று தாத்பர்யங்கொள்வது. இப்பக்ஷத்தில ‘தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள்சொ ன்னேன்” என்கிறபடியே திருவாய்மொழிபாடுகையே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமைசெய்கையாலே ஸர்வாதி ஶயமான பகவத்கைங்கர்யத்துக்கு மோக்ஷாநந்தமும் ஸர்வேஶ்வராநந்தமும் கூடினால்தான் ஸத்ருஶமாகமாட் டுமோஎன்று பாட்டுக்குத் தாத்பர்யம் வ்யக்தமாயிற்று. ||௬||

எ— தனிமாப்புகழேயெஞ்ஞான்று நிற்கும்படியாய்த்தான்றோன்றி* முனிமாப்பிரமமுதல்வித்தா யுலகமூன்று முளைப்பித்த* தனிமாத்தைவத்தளிரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார்*

(தனிமாப்புகழே) இங்கேயிப்போதே நான்பெற்ற அநுபவிக்கிற பாகவதஶேஷத்வத்திற்கு வ்யதிரேகமான பரமபதாநுபவமும் இங்கே வஸித்தபின்பு இதுக்குவிரோதியான பரமபதாநுபவமும்வேண்டா இது [illegible].

இ— என்கிறவித்தாலே கீழ்ப்பாட்டிற்சொன்னதையே ப்ரகாராந்தரேண த்ருடீகரிக்கிறதிப்பாட்டென்று ஸங்கதிஸூசிதை. இத்திருவாய்மொழியின் அவதாரிகையிலே ஸர்வேஶ்வரவைபவமும் பாகவதஶேஷத்வபர்யவஸாநத்துக்கு ஸத்ருஶமன்றென்றிவர் ஆறாம்பாட்டுக்குத் தாத்பர்யமருளிச்செய்கையாலே இங்கு இத்திருவாய்மொழி அநுபவத்தாலவரும் ப்ரீதிக்கு ஸத்ருஶமன்றென்றிப்பாட்டுக்குத் தாத்பர்யமருளிச்செய்தது யோஜநாந்தரமாக அருளிச்செய்தபடி. இந்த யோஜநாரூபமும் ஸ்வாபதேஶத்திலே ஸ்பஷ்டமாகிறது. அந்த வ்யாக்யாயோஜனையான பக்ஷத்தில் மூன்றாம்பாட்டில் மோக்ஷாநந்தமும் இதுக்கு ஸத்ருஶமன்றென்றருளிச்செய்தவர் நடுவே இரண்டுபாட்டுகளாலே சிலஶங்கைகளை பரிஹரித்து அநந்தரமிப்பாட்டிலே அந்தமோக்ஷாநந்தமும் ஸர்வேஶ்வராநந்தமும் கூடினால்தான் இதுக்கு ஸத்ருஶமாமோவென்கிறாரென்றிப்படி இப்பாட்டுக்கு மூன்றாம்பாட்டோடே ஸங்கதிகண்டுகொள்வது. ॥௬॥

* ஏழாம்பாட்டு *

பாகவதகைங்கர்யத்துக்கு வ்யதிரிக்தமாக பரமபதாநுபவமும் வேணுமென்று நாலாம்பாட்டிற்சொல்லி யிருக்க இப்பாட்டிலே அடிக்கீழ்ப்புகுதலன்றி இத்யாதியாலே பரமபதாநுபவநிஷேதபர்யவஸிதமான பாகவதஶேஷத்வத்தை ப்ரார்த்திக்கை விரோதமன்றோவென்ன? இதுக்குத் தாத்பர்யஞ்சொல்லுகைக்காக கீழ் மூன்றுபாட்டுகளினுடைய நிஷ்க்ருஷ்டார்த்தத்தை அநுவதிக்கிறார் (இங்கேயித்யாதியால) அநந்யார்ஹபாகவதகைங்கர்யவ்யதிரிக்தமான பரமபதாநுபவமும் அபேக்ஷிக்கையாலே ஸ்ரீவைகுண்டத்தில பரமபதாநுபவம் வேண்டாவென்று நிஷேதிக்கிறதாகையாலே இது நாலாம்பாட்டுக்கு அவிரோதமென்றதாயிற்று. ஶேஷத்வத்துக்கென்றது- ஶேஷவ்ருத்திக்கென்றபடி. யதா– ஶேஷத்வம் ஶேஷிணாம். அத்தைவர்த்திப்பிக்கையாவது- கைங்கர்யவர்த்தனமாக்குகையும் பாகவதர்கள்பக்கல் உள்ள குணங்களை அறியப்பண்ணி குணக்ருததாஸ்யத்தையுமுண்டாக்கி அம்முகத்தாலே அந்த ஶேஷத்வத்தை அபிவர்த்திப்பிக்கையும். தெய்வத்தளிரடிக்கீழ் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இதுக்குவிரோதீத்யாதியால்) ஸ்ரீவைகுண்டத்தில

ப— தனி- அத்விதீயமான, மா- மஹத்தான, அதிஶ்லாக்யமானவென்றபடி; புகழே- கீர்த்தியையே, நாமரூபங்களையிழந்து தமஸ்ஸமமாய்க்கிடக்கிற ஸமயத்திலே இவற்றையுண்டாக்கின மஹாகீர்த்தியையென்றபடி. எஞ்ஞான்றும்- ஸர்வகாலமும், நிற்கும்படியாய்- வேதாந்தங்களிலே ப்ரதிபாத்யமாய்க்கொண்டு ஸ்திரமாயிருக்கும்படியாக, தான்- ஸ்வயமேவ, ஸாக்ஷாத்ப்ரபஞ்சங்களாகையாலே ஜீவஜாதங்கள் தன்னை அபேக்ஷிக்கவும் அறியாதேகிடக்க காருண்யப்ரேரிதனாய் தான்தானேயென்றபடி. தோன்றி- "ப்ராதுராஸீஜ்ஜகந்நாத:" என்கிறபடியே ஸ்ருஷ்ட்யுந்முகனாய்த்தோற்றி, முனி- மநநம்பண்ணுமதான, "பஹுஸ்யாம்" இதி ஸங்கல்பிக்குமதானவென்றபடி. மாப்பிரமம்- மஹாப்ரஹ்மமான, பரப்ரஹ்மமானவென்றபடி. பரப்ரஹ்மமென்று வேதாந்தங்களிலே ஓதப்பட்டிருந்துள்ள வஸ்துவானவென்கை. முதல்வித்தாய்- முதலினபீஜமாய், வித்து- பீஜம், ஸர்வத்துக்கும் த்ரிவிதகாரணமாயென்றபடி. உலகமூன்றும்- லோகத்ரயத்தையும், ஸர்வலோகத்தையுமென்றபடி. முளைப்பித்த- "யதாவ்ருக்ஷஸ்ய [illegible] ஸம்பவதி" என்கிறபடி தன்னிடத்திலே ஸங்கோசிப்பித்ததான, உத்பாதநம்பண்ணினதானவென்றபடி. தனி- நிஸ்ஸமாப்யதிகமான, மாத்தெய்வம்- மஹாதேவத்தினுடைய, "நதைவம்கேஶவாத்பரம்" என்றுசொல்லப்பட்ட பரதேவதையினுடைய வென்றபடி. தளிரடிக்கீழ்- பல்லவம்போலே [illegible] ஶிஶிர [illegible] ரமணீயங்களான திருவடிகளின்கீழே, தளிர்- பல்லவம், புகுதல- ப்ரவேஶிக்கை, ஸ்ரீவைகுண்டத்திலேபோய் அவன்திருவடிகளிலே ப்ரவிஷ்டனைப்போலே பிரியாமல அடிமைசெய்கையென்றபடி. இன்றி- இல்லாமல், அதெனக்கு வாராமலென்றபடி. இங்குள்ள பாகவதர்களுக்கு அடிமைசெய்கைக்கு விரோதியாகையாலே அதெனக்கு வேண்டாவென்றுகருத்து. இதுக்கு வாய்க்கவென்கிறத்தோடே அந்வயம். வேதாந்தநிந்ததமோக்ஷம் ஸஹிக்கைக்காக

ஸூ — நனிமாக்கலவி இன்பமே நாளும்வாய்க்க நங்கட்கே* ॥எ॥

நாளும்வாய்க்க நங்கட்கு நளிர்நீர்க்கடலைப்படைத்துத்தன்* தாளுந்தோளுமுடிகளுஞ்சமனிலாதபலபரப்பி*
நீளும்படர்பூங்கற்பகக்காவு நிறைபன்னாயிற்றின்* கோளுமுடையமணிமலைபோற் கிடந்தான்றமர்கள் கூட்டமே* ॥அ॥

தமர்களகூட்டவல்வினையை நாசஞ்செய்யுஞ்

---

ஆ — மானஸாநுபவ ஸமயத்திலே பாஹ்ய ஸம்ஶ்லேஷ ஸுகமே நாளும்வாய்க்க நங்கட்கென்கிறார். ॥
(நாளும்வாய்க்க) அவர்களோடு ஸம்ஶ்லேஷமே வேணுமோ ஸஹவாஸமாத்ரமே என்றும் ஸித்திக்கவமையுமென்கிறார். ॥அ॥

---

இ — மானஸாநுபவமென்றபடி ஸ்ரீவைகுண்டத்திற்புகும்போது இங்குள்ள பாகவதஸம்ஶ்லேஷம் விச்சின்னமாய் விடுமாகையாலே அது இதற்கு விரோதியாயிற்றே. மானஸாநுபவமுமென்கிறவிடத்தில் உகாரத்தாலே இது ஸம்ஶ்லேஷ ஸாக்ஷாத்காரமானாலுமென்று தோற்றுகிறது. நாலாம்பாட்டிற்சொன்ன ஸர்வேஶ்வர மானஸாநுபவம் உபாய ஸாத்யமாகையாலே அவனடியாரிஸ்த்ருதிவாக்யத்திலே அதுவும் ஸித்தமென்று நினைத்தருளிச்செய்கிறார் (இதுக்கு த்வயஸம்ஸ்ருதியால்) அவன்அடியார்ஸ்ருதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பாகவதஸ்ருதியால்)॥

✳ எட்டாம்பாட்டு. ✳

தமர்கள்கூட்டம் நங்கட்குநாளும்வாய்க்க என்றருளித்து இதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவர்களோடி ஸ்ருதியால்) இதுவேஸம்மதியுமாயிற்று. ஸம்ஶ்லேஷம் ஸர்வாத்மநா ஸம்மதவும். ॥அ॥

---

ப — பரமபதம் ஸர்வஸ்த்ருதிவ்யாபாரம்பண்ணுகிறதென்று வ்யஞ்ஜிப்பிக்கைக்காக இங்குகாரணாகார நிர்வணித்தது, அதுதானும் பரமபதவ்யாபாரத்துக்கெல்லாம் ஹேதுமாயிருக்கிற ஶாஸ்த்ரமும் பாகவதஸம்ஶ்லேஷவிரோதியாகில் எனக்குவேண்டாவென்றபடி. பாகவதஸம்ஶ்லேஷத்தினுடைய சீர்மையை வ்யக்தமாக்குகைக்காக, அவனடியார்- இந்தகாரணவாதி கல்யாணகுணங்களாலே வஶீக்ருதராய் தாஸ்யரஸிகராயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, நனிமாக்கலவி- மிகவும்ஸ்லாக்யமான ஸம்ஶ்லேஷத்தில், நனியென்று ஸுஸாதநம். மா என்று உத்தமத்தாய் ஸ்லாக்யமென்றபடி. இன்பமே- ஸுகமே, நங்கட்கு- இதுவே நிரதிஶயபுருஷார்த்தமென்றறியப்பெற்றநமக்கு, நாளும்- ஸர்வகாலமும், வாய்க்க- ஸித்திக்கக்கடவது, ஸ்வரூபாநுரூபமாக வொதுக்குமோ ஸித்திக்கவேணுமென்றபடி. ॥எ॥

நளிர்நீர்- ஶீதளமான ஜலத்தையுடைத்தான, நளிர்- ஶீதலம், ஸ்வபாவமாகையால் ஸூர்யாதபாதிஸம்பந்தமில்லாமையால் ஸதாஶீதளமான ஜலத்தையுடைத்தான என்றபடி. இத்தால் காரணதேஶஸ்திதமாயிற்று. கடல்- ஏகார்ணவத்தை, படைத்து- ஸ்ருஷ்டித்து, சமனிலாத- ஸத்ருஶரஹிதங்களான, ஸௌந்தர்யாதிகளால் நிஸ்ஸமங்களான என்றபடி. பல- “ஸஹஸ்ரஶீர்ஷாபுருஷ:” இத்யாதிகளில்படியே ஸஹஸ்ரங்களான, தன்- தன்னுடையவையான, தனக்கு அஸாதாரணங்களான என்றபடி. தாளும்- திருவடிகளையும், தோளும்- புஜங்களையும், முடிகளையும்- ஶிரஸ்ஸுக்களையும், பரப்பி- ஸ்வயமாகவெல்லாம் நிறையும்படி ஸ்வாதாரணம்பண்ணிக்கொண்டு, இதுக்குக் கிடந்தானென்கிறத்தோடே அந்வயம், நீளும்- உத்தமமாயிராநின்றுள்ள, படர்- விஸ்தீர்ணங்களாமபடி தழையாநின்றுள்ள, பூம்- ரமணீயங்களான கற்பகக்காவும்- கல்பவ்ருக்ஷநங்களையும், காவு- உத்யாநம், இது தாள்களுக்கும் தோள்களுக்கும் உபமாநம். நிறை- பரிபூர்ணங்களான், ஸகலகிரணராஶிகளானவென்றபடி. பல- அஸங்க்யாதரான, நாயிற்றின்- ஸூர்யர்களுடைய, நாயிறு- ஸூர்யன், கோளும்- தேஜஸ்ஸுக்களையும், இது திருமுடிகளுக்கு உபமாநம். உடை- உடைத்தான, மணிமலைபோல்- ரத்நபர்வதம்போல், இதுதிருமேனிக்கு உபமாநம். கிடந்தான் அந்தவனகாலத்தில் கண்வளர்ந்தருளின ஸ்வாமியுடைய, தமர்கள்கூட்டம்- தாஸர்களோடு சேர்த்தியானது, கூட்டம்- சேர்த்தி, ஸஹவாஸமென்றபடி. கண்வளர்ந்தருளின அழகுக்குத்தோற்றடிமைப்பட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களோடு ஸஹவாஸமென்றபடி. நங்கட்கு- இதுவேபுருஷார்த்தமென்றத்யவஸிக்கப்பெற்றநமக்கு, நாளும்- ஸர்வகாலமும், வாய்க்க- ஸித்திக்கக்கடவது. ॥அ॥

தமர்கள்கூட்டம் - தாஸஜநஸம்பந்தத்தினுடைய, வல்வினையை- ஸ்வஸாத்ருஶ்யங்களை, நாசஞ்செய்யும்-

மூ—சதி (து) ர்மூர்த்தி* யமர்கொளாழிசங்குவாள்விறறண்டாதிபலபடையன்* குமரன்கோலவைங்கணை வேடாதைகோதிலடியார்தந்* தமர்கடமர்கடமர்களாஞசதிரேவாய்க்கதமியேற்கே* ॥௯॥
வாய்க்கதமியேற்கூழிதோறூழிமாகாயாம* பூக்கொணமேனிநான்குதோள்பொன்னாழிகையென்னம்மான்* னீக்க

ஆ—(தமர்கள்) அவர்களோடு ஸஹவாஸந்தானவேணுமோ, அவர்கள் அடியாரடியாரடியாராஞசதிரே வாய்க்கவுமையுமெனகிறார். ॥௯॥
(வாய்க்க) இப்ஸாஹாவ்யமேயெனக்கு மென் வம்ஶ்யத்துக்குமெனறும் வாய்க்கவேணுமென்கிறார். ॥௰॥

*ஒன்பதாம்பாட்டு.*

இ—பாட்டுக்கு ஸங்கதியும் தாத்பர்யமும் அருளிச்செய்கிறார் (அவர்களோடி த்யாதியால்) ॥௯॥

*பத்தாம்பாட்டு.*

அவர்க்கே குடிகளாயிசூழி தமியேற்குவாய்க்கவென்றபித்துத் அதுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் இப்ஸாஹாவ்யமேயித்யாதியால்) இப்ஸாஹாவ்யமென்றது- அவர்களுக்கே வாரேவயிஷாஸனுபிருக்கையாகிற ஶேஷ வ்யாபாரமென்றபடி. என்வம்ஶ்யத்துககுமென்றது- குடிகளாய்ச்சொலலும் என்கிறதின் ஸ்வாரஸ்யம். வம்ஶ்யத்துக்குமென்றது- ஶிஷ்யப்ரஶிஷ்யாதிகளான ஸந்தானவர்த்திகளுக்கு மென்றபடி. இத்தால் கீழேதமக்கிதை ப்ரார்த்தித்தவர் இப்பாட்டிலே தம்முடைய ஸந்தானவர்த்திகளுக்குங்கூட ப்ரார்த்திக்கிறாரென்று ஸங்கதிஸூசிதை. ॥௰॥

ஶ—நாஶம்பண்ணுமவனான, சதிர்மூர்த்தி- அதுக்கு உபயோகமாக வாஸநாஶக்தாங்களான மூர்த்திகளையுடையவனான, சதுர்மூர்த்தியென்று வாசமானபோது வ்யூஹசதுஷ்டய விக்ரஹஶாலியான வென்றபடி அமர்கொள்- யுத்தத்தைககொள்ளுமவையான, அமர்- யுத்தம், விரோதிநிரஸநார்த்தமாக யுத்தோத்யுக்தமாநின்றுள்ள என்றபடி. ஆழி சங்கு வாள் வில் தண்டாதி- ஸுதர்ஶந பாஞ்சஜந்ய ஶார்ங்கதிகளான, வாள் வ்ருஷம், தண்டு- கதை, பல்- அஸங்க்யாதங்களான, படையன்- ஆயுதங்களையுடையவனான, குமரன்- நித்யயுவாவான, குமரன்- யுவா, இது க்ருஷ்ணனுக்குவிஶேஷணம். கோல- ஸுந்தரனான இது காமனுக்கு விஶேஷணம். ஐங்கணை- பஞ்சபாணனான, கணை- பாணம், வேள்- காமனுடைய, வேளென்று காமனுக்குப்பெயர், தாதை- பிதாவான ஸ்ரீக்ருஷ்ணனுடைய, காமனுக்குங்கூட உத்பாதகனாகையாலே நிரதிஶயஸௌந்தர்யலாவண்யநிதியான க்ருஷ்ணனுடையவென்றபடி. கோதில- அவத்யரஹிதரான, ப்ரயோஜநாந்தரஸம்பந்தரஹிதரான வென்றபடி. யதா- ஸ்வார்த்தப்ராவண்யமும் அதிஶங்கையுமாகிற பழுதில்லாதவர்களான வென்றபடி. அடியார்தம- தாஸஜநங்களுடைய, தம்என்று ஸ்வாதீநத்வயோகம், தமர்கள்தமர்கள்- தாஸருக்குமடிமைசெய்யும் ஸஹ்ருதர்களுடைய, தமர்களாம்சதிரே- தாஸஹ்ருதராகிற வாதாத்ம்யமே, இங்கு வாதாத்ம்யமாவது அவர்களுக்கு நிரதிஶயவ்யாபாரஷயமாஹம், தமியேற்கு- ஸம்ஸாரத்தில் தாத்ருஶரைக கிடையாமையாலே அஸஹாயனானவெனக்கு, தமியன்- அநாதி, இச்ஶப்தத்தாலே தன்னைச்சொல்லிக்கொள்ளும்போது தமியேனென்று ரூபமாயிருக்கும், தமியேற்கென்று ஷஷ்ட்யர்த்தம். வாய்க்க- ஸித்திக்கவேணும். ॥௯॥

மா- மஹத்தான, அதிஶ்லாக்யமான என்றபடி. காயாம்பூ அதஸீபுஷ்பங்களை, காயாவென்று அதஸீ. கொள்- கொள்ளாநிற்கிறதான, புஷ்பங்களைக் கொள்ளுகையாவது புஷ்பகாந்திகளைக் கொள்ளுகை. அதஸீபுஷ்பகாந்திஶாலிகளான வென்றபடி. யதா:— "கொண்டானேழவிடை" என்கிறவிடத்திலேபோலே கொள்ளுகை, ஜயிக்கையாய் அதஸீபுஷ்பங்களை ஜயிக்கையாவது அதஸீபுஷ்பாதிக காந்திஶாலியான வென்றபடி. மேனி- திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையனானான, நான்குதோள்- ஆஶ்ரிதர்க்கொதுங்க நிழலாம்படி கற்பகத்தருபணைத்தாப்போலேயிருக்கிற நாலுபுஜங்களை யுடையவனான, பொன்னாழிக்கை- கற்பகத்தரு பூத்தாப்போலே ஸ்ப்ருஹணீயமான திருவாழியையும் திருக்கையையும் உடையவனான, பொன் ஶப்தம் இங்கே ஸௌவர்ண்யத்தாலஸ்ப்ருஹணீயவாசம். என்னம்மான்- இவ்வழகுகளாலே என்னை அடிமைகொண்ட ஸ்வாமியுடைய, இதுக்கு அடியார் என்கிறதோடே அந்வயம். நீககமிலலா- விஶேஷமில்லாதவர்களான, நீக்கம்- விஶேஷம், ப்ராஹ்மணஶ்ரேஷ்டர்களைப்போலே ஒருநாளும் விஶேஷித்தகைங்கர்யவிச்சேதமில்லாதவர்களான

